REGD 4642 M

சந்தா விபரம்
—
1 ஆண்டு ரூ 7,
½ „ 3 8 0

# திராவிடநாடு

16 பக்கம்
விலை
இரண்டணா

இலங்கை 15 சதம்   மலாயாநாட்டு [illegible] காசு

மலர் 8 | 18—12—49 | இதழ் 25

## சர்வாதிகார உதயம்!




இந்தியாவின் எதிர்காலம், அரசியல் நிர்ணய சபையில், முடிவு செய்யப்பட்டு விட்டது. நயவஞ்சக நாஜிசம், பசப்பும் பாஸிசம் ஆகியவைகளின் அச்சுத்தான், இந்தப் புது அரசியலமைப்பு என்பதைச் சித்தரித்து 'பிளிட்ஸ்' வெளியிட்டுள்ள படம் இது!

ஸ்பில்ஸ்பரி

# சிக்கல் தீர்த்த சிங்கம்

[அரங்கண்ணல்]

ஒரு சிச்கலான வழக்கு. குற்றவாளிக் கூண்டிலே, ஒரு டாக்டர் நிறுத்தப்பட்டிருக்கிறார்—தன்மனைவியைத் தானே கொன்று துண்டித்து தன் அறையில் புதைத்துவிட்டு வெளிநாட்டுக்கு ஓடி விட்டார் என்பது சர்க்கார் தரப்பு வாதம்!

'என் மனைவி என்னைக் கவனிக்கவில்லை, எவனையோ இழுத்துக் கொண்டு எப்போதோ ஓடிவிட்டாள். போலீசார் கண்டுபிடித்த, பிரேத உறுப்பு அவளுடையதல்ல, ஆகவே குற்றச்சாட்டு ஒரு கட்டுக் கதை' இது டாக்டர் தரப்பு வாதம்.

கொலை செய்யப்பட்டது என்பதற்கு ஆதாரம், சாட்சிகள் எங்கே? எதிரி தரப்பு வக்கீல், இடித்துக் கேட்கிறார், எங்கே சாட்சி, ஏதாவது உண்டா ஆதாரம் என்பதாக. வழக்குத் தோல்வியுற்றுப் போய் விடுமோ என்று பயம் தட்டுகிறது போலீசாருக்கு — உண்மை, அவர்கள் பக்கமிருந்தும், சரியான சாட்சி இல்லாததால் சஞ்சலப்படுகின்றனர், தவிக்கின்றனர், கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்த குற்றவாளி விடுதலை பெற்றுவிடுவான் போலிருக்கிறதே, வியர்வை வீணாகிவிடுமோ, என்ற ஆயாசம் அவர்கள் உள்ளத்தைத் துளைக்கிறது. வேதனைப் படுகின்றனர், வீணாகிப்போய் விடும் போலிருக்கிறதே வழக்கு என்ற மனவேதனையால்.

*      *      *

இன்னொரு வழக்கு. இதிலும் ஒரு கணவன் தான் குற்றவாளிக் கூண்டிலே நின்றான். இவன் மீது சாட்டப்பட்டதும் கொலைக் குற்றம் தான். மூன்று ஆண்டுகளில், மூன்று தாரங்களைப் பறிகொடுத்தவன் அவன்! முதல்மனைவியுடன் வாழ்ந்து ஓராண்டு முடிவதற்குள் அவள் இறந்தாள். அடுத்து இன்னொரு பெண்ணைக் கல்யாணம் செய்தும், அவளுடனும் நீண்டநாள் அவன் வாழவில்லை. திருமணம் முடிந்த அடுத்த ஆண்டே அவளும் காலஞ் சென்றாள். பசித்தவன் புசித்துக் கொண்டிருக்கும்போது, பாதியில், தட்டிப்பிடுங்குவதுபோல, பழத்தைப் பறிக் கையில் பழம் கைநழுவி பக்கத்து ஆற்றில் விழுவதுபோல, அவனுக்கு வாய்க்கும் மனைவிமார்கள் இறப்பது குறித்துச்சுற்றியிருப்பவர்கள் எல்லாம் துயரமடைந்தனர். இருதாரமிழந்தும், இன்னொருதடவையும் மணம் புரிந்துகொண்டான்—பழையமனைவி மறைந்த துக்கமும் துயரமும் தாங்கவில்லை; எனினும், இவளை மணம்செய்து கொள்கிறேன் என்று கூறிக்கொண்டு. மூன்றாவது மனைவியும் வாழ்ந்தாள்—சில மாதங்கள். பின், முன்பு வீசியபுயலே வீசியது! அவளும், மரணவாயில் வீழ்ந்து விட்டாள். குளிக்கச் சென்ற அவள் தண்ணீர்த் தொட்டியில் தவறி வீழ்ந்து, மூழ்கி, இறந்தாள். மனைவியிழந்த அவனும், வருந்தினான். அவன் வருத்தம், எல்லோரையும் துயரத்திலாழ்த்தியது. எனிப்படி, இவனைக் கல்யாணம் செய்துகொள்ளுபவர்கள், இறந்து மடிகின்றனர் என்று கேட்டனர் சிலர். என்னமோ, பாவம் பரிதாபம் என்று சோகச் சொற்களைப் பதிலாகத் தந்தனர்சிலர்.

பெண்ணைப் பெற்றோர்களோ, இரண்டு தாரமிழந்தவனாயிருந்தும், இவனுக்குப் பெண்ணைக் கொடுத்தது, முன்பின் யோசியாது செய்த நமது மூடத்தனம், என் செய்வது! யாரை நோவது! அவள் விதி அவ்வளவுதான்! அவன்தான் என்ன செய்வான்? குளிக்கப்போன இடத்தில், தவறிவீழ்ந்து, தடுமாறிஇறந்து போனது அவனுடைய குற்றமா! இவ்வளவுதான் கொடுத்து வைத்தது, என்று, தங்களைத் தாங்களே தேற்றிக் கொண்டனர்.

மூன்று மனைவிகள்—மூவரும், இறந்தனர்—எப்படி? ஏன்? என்ற சந்தேகம் மட்டும் சிலருக்கு ஏற்படலாயிற்று! முன்பு பெண்களைக் கொடுத்தவர்களுக்கும், மூன்றாவது தாரமும், இறந்த செய்திகேட்டதும் ஏன்? எப்படி? என்று அறிய ஆவலுண்டாயிற்று!

கேட்டார்கள், எப்படி இறந்தாளாம் என்று அக்கம் பக்கத்திலுள்ளவர்களை! குளிக்கப்போனாள்—தவறி வீழ்ந்தாள், தண்ணீர்த் தொட்டியில்—வாழ்வு முடிந்தது—இந்தப் பதிலைக் கேட்ட, ஒரு 'மாஜி'மாமனாருடைய உள்ளத்தில் சந்தேகம் எழும்பியது! நமது மகள் இறந்தபோதும் இப்படித்தானே கூறப்பட்டது, என்று நினைத்துப் பார்த்தார். அவர்மகள் இறந்தபோதும், இக்காரணம்தான்காட்டப்பட்டது. உண்மையும் கூட அதுதான், அவனுடைய மனைவிமார் எல்லாம், குளிக்கப் போன போதுதான் இறந்தனர்—தவறிவீழ்ந்துஇறந்தனர்!

சந்தேகம் சமர்புரியவே, ஒரு 'மாஜி' மாமனார், 'மாஜி' மாப்பிள்ளை மீது வழக்குத் தொடர்ந்தார்—தன் மகள் இறந்தமைக்கும் அவனுக்கும் 'ஏதோ' காரணம் இருக்கவேண்டுமென்று! அதன் விளைவாகக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டான்.

*      *      *

தலையில்லாத முண்டம்! கால் கைகள் துண்டிக்கப்பட்டு — கோரமாகக் காட்சியளித்த பிரேத உருவம் ஒன்று ஒருநாள் குப்பைமேட்டில் கிடந்தது இன்னாரெனத் தெரிய முடியாதபடி! போலீஸ் விசாரணையில், வண்ணானுடைய குறி ஒரு கிழிந்த உடையின் மூலையிலிருக்க அடையாளம் கண்டு, அது ஒரு பெண்ணின் பிரேதம் என்று வெளியாயிற்று. பெண் என்று தெரிந்ததேயொழிய, அவள் யார், எங்கிருப்பவள், ஏன் கொல்லப்பட்டாள், கொன்றவர் யார், கொலைக்குக் காரணம் என்ன, என்பதுபற்றிய விபரம் எதுவுமே கிடைக்கவில்லை! போலீசார், குற்றவாளியைக் கண்டுபிடிக்க முயன்றனர், ஆனால் முடியவில்லை!

முடிவில் — ஒரு கசாப்புக்கடைக்காரன்என்றுதெரியவருகிறது.



இந்த விசித்திர வழக்குகள் — பிரிட்டனில் நடந்தவையாகும். கொலை நடந்திருக்கும்— குற்றவாளியும் பிடிபட்டிருப்பான் — வழக்கும் நடைபெறும், ஆனால் தீர்ப்பு, குற்றவாளியை விடுதலை செய் என்பதாகவேயிருக்கும்! இது, இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் அங்கு நிலவியநிலைமை! பெயர் பெற்ற துப்பறியும் புலிகளான 'ஸ்காட்லாந்துயார்ட்' என்ற போலீஸ்படையினர் இருந்தும், அவர்களால், குற்றம் செய்தவன் இன்னார் என்று, கண்டுபிடிக்க முடியுமேயொழிய—வழக்கு மன்றம் கொண்டுவந்து, அவன் எப்படிச் செய்தான் எப்படி நடைபெற்றது அந்தக்கொலை, என்பது குறித்து அவர்களால் அறிய முடிவதில்லை. அதன் காரணமாகக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டாலும், தீர்ப்பு கொலைகாரர்களுக்குச்சாதகமாகவே கூறப்படும்! சாட்சிகளும், ஆதாரங்களும்இல்லாதகாரணத்தால் "உண்மை" மறைக்கப்படவேண்டிய [illegible]லை, பிரிட்டிஷ் நீதிமன்றங்களில் தவிர்க்கமுடியாததாயிருந்தது! "இவன்தான் செய்தான்" என்று [illegible]ண்டுபிடிப்பதைவிட, எப்படி நடைபெற்றது' என்று அறிந்துரைத்து வழக்கு நடத்துவதிலே, அவ்வளவு வேதனையும், வியர்வை சிந்தவேண்டிய நிலையும், நீடித்தது! இப்படி நீதிமன்றங்களையும் போலீஸ் புலிகளையும், திகைத்துத் திடுக்கிடச் செய்த, தடுமாறவைத்த வழக்குகளில் சில தான்—நாம் மேலே தந்திருப்பது.

[illegible] மனைவியைக் கொன்றவன் என்று குற்றஞ்சாட்டினர். கூண்டில் நிற்பவனோ, இல்லை என்று மறுக்கிறான்—மனைவி, மாற்றானோடு ஓடிவிட்டாள் என்று கூறுகிறான்.

மறுக்கவோ, இப்படித்தான் நடந்தது என்று சாட்சியம் காட்டவோ முடியாது போலீசார் தத்தளிக்கின்றனர்— தவிக்கின்றனர்.

மூன்று மனைவிமார்கள்—வாழ்க்கையில் முழு இன்பம் பெறுமுன்பே அவர்களை இழக்க நேரிடுகிறது. [illegible]ரார் கணவன் மீது பரிதாபப்படுகின்றனர்.

மனைவிகள் மறைவுக்கும், அவர்களை மணந்த மணாளனுக்கும் [illegible]தோ தொடர்பு இருந்துதானாக வேண்டுமென்று போலீசாரும், பெண்களைப் பெற்றோரும் கருதுகின்றனர். குற்றம் சாட்டுகின்றனர், கூண்டில் நிறுத்துகின்றனர். ஆனால், எப்படி, ஏன், என்பது விளங்கவில்லை.

அவள் இறந்தது உண்மை, உடல் தலைவேறு கால் வேறாகத் துண்டிக்கப்பட்டதும்உண்மை, அவைகளைச் செய்தவன் ஒரு கசாப்புக் கடைக்காரன் என்பதும் உண்மையென்று தோன்றுகிறது. கொண்டுவந்து, கோர்ட்டார் முன் நிறுத்தப்படுகிறான், குற்றம் அவன்மீது சுமத்தப்படுகிறது, ஆனால் எப்படி அவன் செய்தான், யார் அதைக் கண்டவர்கள்;இவைகளைமெய்ப்பிக்கும் சாட்சியங்கள் கிடையாது.

சங்கடமான நிலைமையல்லவா இது, இப்படிப்பட்ட வழக்குகளைக் கண்டுபிடிக்க வேண்டும்! குற்றம் ருஜுவாகவில்லையென்று வழக்குகள் தோல்வியடைந்து கொண்டே போனால் குற்றவாளிகளின் கும்மாளத் தோட்டமாகவல்லவா, ஆகிவிடும் நாடு! ஆகவே, இது பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குப் பெரும் தலைவலியாக இருந்தது. இந்த வேதனை நீக்கி, விஞ்ஞானக் கண்கொண்டு, இதுபோன்ற இக்கட்டுகளை நீக்கி, உண்மை காண முடியும் என்று உரைத்தவர் —மெய்ப்பித்து சிக்கலைத் தவிர்த்த சிங்கம் சர் பேர்னார்ட் ஸ்பில்ஸ்பரி என்ற விஞ்ஞானியாவார்.

சங்கடமும் சஞ்சலமும் நிறைந்த இதுபோன்ற வழக்குகளை, போலீஸ் துப்பு மூலம் மட்டுமின்றி, தன்னுடைய வைத்தியத் திறமையைக் கொண்டு, விஞ்ஞான வழியில், குற்றவாளிகளைக் காண முடியும் என்று, பிரிட்டனுக்கு உணர்த்தி, உண்மை விளக்கம் தந்த உத்தமர் இவர். ஸ்பில்ஸ்பரியின், பெயர் பிரிட்டிஷ் நீதிமன்றங்கள் எங்கும் நிறைந்த ஒன்றாகும்.

1910ல் இலண்டன்மாநகரில் தான், நாம் ஆரம்பத்தில் குறிப்பிட்ட டாக்டரின் வழக்கு நடைபெற்றது.

போலீசாரிடமோ, நேரடியான சாட்சியங்கள் கிடையாது, தோண்டியெடுத்த பிணத்திலிருந்து அவர்களுக்கு அறியமுடிந்ததெல்லாம் ஆறு அங்குல நீள அகலமுள்ள, ஒருசிறியஉடம்பின்மேல்தோல்தான் அதைக் கொண்டுதான், அவர்கள். குற்றத்தை நிரூபித்தாகவேண்டும். குற்றம் சாட்டப்பட்ட டாக்டரோ, இறந்தவள் என் மனைவியல்ல, யாரோ எனக்குத் தெரியாது, என் மனைவிதான் முன்பே ஓடிப்போய் விட்டாளே என்று கூறுகிறார். எனவே, இறந்தவர் இவருடைய மனைவிதான் என்பதை நிரூபிக்க வேண்டும். ஆறு அங்குலம், சிறு தோலை மட்டும் வைத்துக்கொண்டு இதைச் சாதிப்பது என்பது சாத்யமா!

இந்த நெருக்கடியான நேரத்தில் தான் ஸ்பில்ஸ்பரியின் திறமை போலீசாருக்கும், பொது மன்றத்துக்கும் புரியவந்தது. அவர், போலீஸ் இலாகாவின் அழைப்பின் பேரில், அந்த உண்மையைக்கண்டு பிடித்து வெளியிட்டார்.

இதற்கு அவருக்கு ஒத்தாசையாகயிருந்தது, ஒரு பூதக்கண்ணாடியும் அவருடைய விஞ்ஞான அறிவும்தான்!

இறந்த மாதின், சிதைந்த உடலிலிருந்து கிடைத்த அந்தச் சிறு தோல் துண்டை அவர், சோதனை செய்தார். அதில், சிறு ஆபரேஷன் செய்யப்பட்டதால் ஏற்பட்ட வடு அவருக்குத் தென்பட்டது. அதன் மீது, விசாரணை நடத்தியதில் குற்றம் சுமத்தப்பட்ட டாக்டருடைய மனைவியாருக்குச்சில ஆண்டுகள் முன்னர் சிறு ஆபரேஷன் நடைபெற்ற விபரம் தெரியவந்தது.

ஆபரேஷன் நடைபெற்ற விபரம் தெரியவந்து விட்டால் மட்டும் போதாதே, அதைக்கொண்டு அந்த டாக்டர்மீது குற்றம் சுமத்தினால், "வேறுயாரோ ஒருவருடையதாகயிருக்கலாம்! இதைக்கொண்டு எப்படிக்குற்றம் சுமத்தமுடியும்! அது பெண்ணுடைய தோல்தான் என்று எப்படி உறுதியாகச் சொல்கிறீர்கள், ஆணுடைய தோலாக இருக்கக்கூடாதா?,' என்ற கேள்வி பிறக்கலாமல்லவா! ஆகவே, ஸ்பில்ஸ்பரி, தனது விஞ்ஞான அறிவின்மூலம், கிடைத்த சிறுதோல் ஒரு பெண்ணுடையதுதான் என்பதை, அத்தோலைப் பரிசிலனைசெய்து, அறிந்து கொண்டு, அதன்பின் அத்தோல் உடலின் எந்தப் பாகத்தைச் சேர்ந்தது என்பதையும்கண்டார்.

சோதனையின் விளைவாகத், தோல், ஒரு பெண்மணியின் வயிற்றுப் பாகத்தில் இருக்கும் தோலை ஒத்தது என்றும், ஆகவே இது ஒருபெண்மணியின் வயிற்றுத் தோல் என்றும் ஆகவே, கொலையுண்ட பெண்மணிக்கு வயற்றில் ஆபரேஷன்நடத்தப்பட்டிருப்பதால், கொலையுண்ட பிரேதம் அவளுடையதுதான் என்றும், கண்ணுக்கெதிரே, நீதிமன்றத்துக்கு மெய்ப்பித்துக் காட்டினர்!

* * *

குளிக்கச்சென்றாள், வழுக்கி விழுந்து மூழ்கியிறந்தாள் என்று தன்னுடைய ஒவ்வொரு மனைவி இறந்தபொழுதும், காரணம் கூறி, சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தானல்லவா, மூன்று மனைவிகளையும் பறிகொடுத்த ஒருவன்! 'அவன்தான் என்ன செய்வான், அவன் மனைவி தவறிவிழுந்துவிட்டாள். அவன் அதிர்ஷ்டம் அவ்வளவுதான், என்றல்லவா ஊரார் சொன்னார்கள். ஆனால் ஸ்பில்ஸ்பரி முன்னால் இந்த வழக்கு சோதனைக்கு வந்தபோது, ;'அவர்கள் தற்செயலாகச்சாகவில்லை வேண்டுமென்றே சாகடிக்கப்பட்டார்கள். அதைச்செய்தவன் அவர்கள் கணவன்தான்" என்பதையும், வெகு சாமர்த்தியமாக வெளியாக்கினார், தனது விஞ்ஞான அறிவுமூலம்!

நீதிமன்றத்தின்முன், ஒரு தண்ணீர்த்தொட்டி கொண்டுவந்துவைக்கப்பட்டது. ஸ்பில்ஸ்பரி தனது நர்சுகளில் ஒருத்தியை, நீர் நிரம்பிய தொட்டிக்குள் இறங்கச் செய்தார். இறங்கிய நர்ஸ், எப்படி இவ்வளவு சிறிய தொட்டிக்குள், இறக்கமுடியும்? இதுஎன்ன ஓடும்நீரா, அல்லது பரந்தகடலா, இல்லையே, எனவே குளிக்கச்சென்ற பெண்கள் கொலை தான் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று கூறினர்.

கொலை செய்யப்பட்டாளென்றால் சிறுகாயமிருக்கவேண்டாமோ, விஷம் கொடுத்துக் கொல்லப்பட்டாளென்றால் வைத்தியப் பரிசோதனையில் அது விளங்கியிருக்காதோ, அவள் நீரில் மூழ்கியிறந்தாள் என்றுதானே டாக்டர்கள் கூறியுள்ளனர் என்று ஜூரர்கள் கேட்டனர்.

உங்களுடைய கேள்வி நியாயமானதுங்கூட, அவள் நீரில் மூழ்கித்தான் இறந்தாள்' என்றுஸ்பில்ஸ்பரி சொல்லிவிட்டு, நர்சை நீர்த்தொட்டியில் குளிக்கச் சொன்னார். திடீரென்று, அவள் காலிரண்டையும் தூக்கி அவளைத் தலைகீழாய் பிடித்தார்! நீதிமன்றத்துக்குக் காட்டினார், 'பாருங்கள், இவள் இப்போது எவ்வளவு கஷ்டப்படுகிறாள். தண்ணீருக்குள் தத்தளிக்கும் இவளால் எப்படி மூச்சு விடமுடியும்! இப்படித்தான் அவர்கள் வாழ்வும் முடிக்கப்பட்டது' என்று காட்டினார்; நீதிமன்றம் திகைத்தது, ஸ்பில்ஸ்பரியின் திறமையைக்கண்டு. கடைசியில் உண்மை வெளியாயிற்று. தான் மணந்த ஒவ்வொரு பெண்ணுடைய சொத்தும் தன்னுடையதாக வேண்டும் என்ற ஆசைகாரணமாகவே, அவன், அவர்களையெல்லாம் கொலை செய்தான் என்பது!

* * *

மூன்றாவது வழக்கிலும், தலை, கால், கைகள்யாவும் துண்டிக்கப்பட்ட பெண்மணியின் அறையில் இரத்தக்கறைகள் படிந்திருந்தன. இதைக்கண்ட போலீசார், கொலை அங்குதான் நடந்திருக்கவேண்டுமென்றும், ஆனால் கொலையாளி யார் என்றுதெரியவில்லைஎன்றும்ஸ்பில்ஸ்பரியிடம் தெரிவித்தனர். வெட்டுப்பட்ட முண்டத்தைப் பரிசோதித்துக்கொண்டிருந்த, ஸ்பில்ஸ்பரியோ "இந்த அம்மாளுக்கு கசாப்புக் கடைக்காரர்கள் சிநேகிதம் உண்டு போலும்" என்றார். போலீஸ் அதிகாரி சிரித்துக்கொண்டு சென்றுவிட்டார், அவர் கூறியது விளையாட்டாகப்பட்டது அவருக்கு. ஆனால், ஸ்பில்ஸ்பரி சந்தேகப்பட்டதுபோல் கொலையுண்டவருக்கு மிகவும் அறிமுகமான ஒரு கசாப்புக்கடைக்காரரைக்கண்டுபிடித்து அவரைச்சோதிக்கையில் அவரது அறையில் அப்பெண்மணியின் அறையில் கிடந்த இரத்தத் துளிகள்போலவே இரத்தம் சிதறிக்கிடந்தது. பின், விசாரணையின்போது, அவன்தான்கொலைகாரன் என்று தெரியவந்தது.

கொலையுண்டவரின், கால் கைகள் துண்டிக்கப்பட்ட பாகம், அவ்வளவு கச்சிதமாக நறுக்கபட்டிருப்பதைக் கண்டதும்தான் ஸ்பில்ஸ்பரிக்கு, கசாப்புக்கடைக்காரன்நினைவுவந்தது.

பின் இரண்டு இடத்திலும் கிடைத்[த] இரத்தத்தைப் பரிசோதித்தத[ில்] இரண்டும் ஒன்றாகயிருக்கவு[ம்] மேலும்,இறந்தவளுக்கு அவன்கட[ன்] கொடுக்கவேண்டியிருந்தவிபரம்தெ[ரி]யவரவும், விஷயம் விளங்கியது, ஒ[ரு] பெண் மணியின் உதவியுடன், இ[க்] கொலையைச்செய்தான் என்பது!

• • •

ஒரு சிறுதோல்!

ஒரு நீர்த்தொட்டி!

இரத்தக்கறை!

இவைகளால், கொலைகாரர்க[ள்] கண்டுபிடிக்கப்பட்டனர். அதற்[கு] ஸ்பில்ஸ்பரியின் விஞ்ஞான அறி[வு] பயன்பட்டது. வழக்குகளில் வி[ஞ்]ஞானம் எவ்வளவுதூரம் உதவி[யா]யும் என்று வெளிப்பட்டது.

ஸ்பில்ஸ்பரி—பிரிட்டிஷ்போலீ[ஸ்] இலாக்காவில் விஞ்ஞானமுறைய[ை] தந்த 'தந்தை' என்று போற்றப்ப[ட்]டார். அவர், இவ்வளவுதூரம், இ[து] போன்ற வழக்குகளில் சிரத்தையு[ம்] ஆர்வமும் காட்டியதற்கு காரண[ம்] "கொலை" — ஒரு கொடுஞ் செ[யல்] அதில் ஈடுபடும் எவரையும் வி[ட்டு] விடக்கூடாது" என்ற வீராவே[ச]மான எண்ணம்தான். அவர[து] சேவையின் பலனாக எவ்வளவோ சிக்கலான வழக்குகள், சீக்கிரமு[டி]வுற்றிருக்கின்றன! தவறு செய்த[வர்] சட்டத்தில் இடமில்லையென்று [த]ப்பித்திரிந்த சதிகாரர்கள் தண்ட[னை] பெற்றிருக்கின்றனர்!

டாக்டர் பட்டம்பெற்று, மருத்[து]வராகயிருந்து, மாதாமாதம் [எவ்]வளவோ பணவருவாய் வந்துகொ[ண்]டிருந்தும், அவர்விஞ்ஞானம்,வழ[க்கு]களிலும் பயன்படும், என்று மெ[ய்]ப்பிப்பதற்காக அவைகளைத் தத்[தம்] செய்தவர்! வாழ்க்கையைக் கரடு[மு]டான பாதையில் திருப்பிக்கொ[ண்ட]வர்! 'கொலை' என்ற சொல் எங்கு[ம்] நிலவக்கூடாது, என்று எண்[ணி]க் கொண்டு உழைத்த உத்தமர்! [அவ]ரால் பலகொலைக்காரர்கள் தண்[டிக்]கப்பட்டனர் என்பதுமட்டும[ல்ல] குற்றம் செய்யாதவர்களாயிருந்[தும்] கூண்டில் ஏற்றி நிறுத்தப்பட்[ட ...] ணத்தால் கண்கலங்கிய பலநிரப[ராதி]களையும் விடுவித்தவர்!

(16-ம் பக்கம் பார்க்க)



## கண்ணீரால் தீராது கவலை!

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

காங்கிரஸ் ஆட்சியாளர் ஆளவந்தார்களான பின், சுகம் வரும், தொல்லை மறையும், வரிகுறையும் என்று மக்கள் எதிர்பார்த்தனர், வரி குறையவில்லை, ஆனால் வளர்கிறது!

அதே நேரத்தில் சர்க்காருடைய செலவையும் சிந்தித்தால் அதுவும் வளர்ந்திருக்கிறது! வரவிலும் அதிகம்—செலவிலும் அதிகம்—ஆனால் ஒரு நன்மையும் நமக்குக் கிடைப்பதில்லை! இது ஏன் என்று எண்ணமாட்டார்களா மக்கள்! அப்படி எண்ணியதன் விளைவுதான் இன்று எங்கு சென்றாலும் இதை ஏன் செய்யவில்லை, அதை ஏன் செய்துதரக் கூடாது, என்று மக்கள் மன்றம் மகஜர் மூலம் கேட்கிறது!

| | வருமானம் |
|---|---|
| 1938—39 | 16,13 |
| 1947—48 | 50,71 |
| 1948—49 | 57,04 |
| 1949—50 | 55,75 |

(வருமானம் இலட்சக் கணக்கில்)

மாகாண சர்க்காரின் வரவு எவ்வளவு உயர்ந்திருக்கிறது, இருந்தும் நன்மையெதுவும் ஏற்படவில்லை, நலமான காரியம் ஒன்றும் இவர்களால் நடைபெறவில்லை என்பதை எண்ணும்போது, ஆளவந்தார்கள் மீது அன்பா, வரும்? ஆத்திரம் தானே எழும்பும்!

* • •

மக்களின் வாழ்க்கையிலே, சுதந்திரம்வந்தால், மணம்வீசும், மகிழ்ச்சி பொங்கும்—என்று கூறப்பட்டது! எனவே, அப்படி நடைபெறுமாமே என்று எதிர் பார்த்தார்கள்! ஆனால், வாழ்க்கைவளமாகவில்லை, பாலையாக ஆகிறது என்றால் அவர்கள் ஆத்திரப்படாமலோ, ஆயாசத்துடன் பேசாமலோ இருக்க மரக்கட்டையா, மனிதர்கள்தானே!

வாழ்க்கைத்தரம் வரவர மோசமாகிக்கொண்டிருக்கிறது. வாழ்வதற்குத் தேவையான பொருள்களோ கிடைக்க முடிவதில்லை. கிடைத்தாலும், அவைகளின் விலைகளோ,விஷம்போல இருக்கின்றன—நினைத்தாலே நெஞ்சு வேகும் நிலை பிறக்கிறது!

மக்களின்வாழ்க்கைத்தரச்செலவு, எப்படி வளர்ந்திருக்கிறது என்று பாருங்கள்.

| | |
|---|---|
| 1939 | 100 |
| 1847 | 277 |
| 1948 | 315 |
| 1949 | 330 |

ஒன்றுக்கு மூன்று மடங்கு ஆகியிருக்கிறது. வாழ்வதற்கான செலவு வளர்ந்திருக்கிறது—விஷ விருட்சம் போல. வளர்ந்துகொண்டேயிருக்கிறது!

இதையா, எதிர்பார்த்தான் ஏழை விவசாயியும் உழைக்கும் தொழிலாளியும், இவர்கள் ராஜ்யத்தில! எனவேதான், அதிருப்தியும் அருவையும் தாண்டவமாடுகிறது—மந்திரிகளைக் கண்டதுமே மனங்குமுறுகிறார்கள்! மக்கள் என்ன மந்திரிமார்களா—இல்லையே, சாதாரண மக்கள்தானே!

* * •

கோபாலர்மீது, அவரது ஓலத்தைக் காணும்பொழுது, உண்மையில் அனுதாபமே நமக்கு ஏற்படுகிறது! அடிக்கடி நாம், இவர்கள் ஆட்சிப்பீடம் ஏறியபின் நிதிநிலைமை மோசமாகியிருப்பதையும் — அது விழலுக்கிறைத்த நீராக வீணாக்கப்படுவதையும் சுட்டிக்காட்டிக் கொண்டு வருகிறோம். நாட்டின் நாடியான, நிதி, நல்லவழிகளில் செலவாவதற்குப் பதில், ஆடம்பரம், அதிக ராணுவம், போலீஸ்பாதுகாப்பு ஆகியவைகளின் பேரால் செலவழிந்து சிரழிவதைப் பாரீர், இதைத்தடுத்து ஒரு வழிசெய்யக் கூடாதா கேளீர், என்றுகூறி! மக்கள் வாழ்க்கைக்கான செலவு வளர்ந்து கொண்டே போகிறது — எங்கும் அழுகையயம், அல்லல் மழை!

இதைக் கவனித்து, அதைப் போக்கும் வழிகளைக்கண்டு, மக்கள் வாழ்விலே மலர்ச்சியைக் காண வேண்டும்!

மந்திரிநாற்காலி சாஸ்வதமானதல்ல—நாளைக்கு, இன்று அங்கிருப்பவர்களும் மக்கள் சமுத்திரத்தில் ஒருசிறுதுளியாக ஆகவேண்டியவர்கள்தான்—இதை நினைத்துப்பார்க்க வேண்டும், மமதை, மந்திரி என்ற பெருமை, மதோன்மத்த நிலை ஆகியவைகளை மறந்து! நாட்டுமக்களிடமிருந்து வரிகள் வாங்குகிறோம்-அதுவும் அதிகமான அளவில் வாங்குகிறோம், அதற்கான நன்மைகளைச் செய்வோம் என்று திட்டங்களைத் தீட்டி, அவை காகிதத்திட்டங்களாக இல்லாமல் காரியமாற்றும் வகையில் தீட்டி, நல்லன செய்யவேண்டும்!

அப்போதுதான், கண்ணீர் சிந்தும் நிலைவராது—அதுவரை மக்கள் மன்றத்திலே அழுகுரலும் வேதனை ஆத்திரமும் நீடிக்கத்தான் செய்யும்!

மக்கள், மந்திரிமார்களை நோக்கி தங்கள் குறைகளைத்தெரிவிப்பதைக் கண்டு, கண்ணீர் சிந்திப் பயனில்லை. கவலை, கண்ணீரால் தீராது! மக்களுக்கு நன்மைகளைச் செய்துதரும் வகையில் தங்களை, ஆட்சிமுறையை மாற்றியமைத்துக் கொண்டால்தான் தீரும்!

*

# கும்பமேளா

30,000 டன் உணவுப் பொருள்களைச் சேமித்து இருப்பில் வைக்குமாறு உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

இந்தஏற்பாட்டுக்கெனப்பதினைந்து லட்சம் ரூபாய்களை ஒதுக்கிவைத்து, கட்டளை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

மக்களின், நலன்களை உத்தேசித்தே இந்நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளனவாம் — ஐக்கிய மாகாண சர்க்காரின் செய்தியொன்று கூறுகிறது.

உணவுப் பொருளைச் சேமித்து வைப்பதற்கென்று 15 லட்சம் ரூபாய்களை ஒதுக்கிவைத்தது மட்டுமின்றி, எட்டு லட்சம் ரூபாய்களை செலவிடுமாறும் உத்தரவிட்டிருக்கிறது. இந்த எட்டு இலட்சம், எதற்குத் தெரியுமா, சுகாதார ஏற்பாடுகளுக்கென்று!

தேவலாமே, நிதிநிலை சரியாயில்லை, உணவுப் பொருள் போதவில்லை என்று எப்போதும் ஓலம் எழும்பிக் கொண்டிருக்கும், இந்தியாவில், இப்படி மக்கள் நலன்களைக் கருதி நன்மைகளைச் செய்யும் ஒரு மாகாணங்கூட இருக்கிறதா! என்று ஆச்சரியமும் ஐயமும் எழும்பும், அந்த மட்டும் எப்படி இது முடிந்தது என்று தோன்றும்! மக்கள் நிலையுணர்ந்த மந்திரிமார்கள் போலும், எனவேதான், அதிக உணவுப் பொருள் இருக்கின்ற காரணத்தால், சேமித்து வைத்தும் அதற்கெனப் பணம் ஒதுக்கியும் ஏற்பாடுகளைச் செய்திருக்கிறது போலும் என்ற எண்ணம் எழும்பலாம்!

அதிகமாக உணவுப் பொருள் மிஞ்சிவிட்டது என்பதற்காக அல்ல, இந்தச் சேமிப்பு! நிதி நிலைமை சுமுகமாகஇருக்கிறது, எனவே செலவழிப்போம் எட்டுலட்சத்தைச் சுகாதாரத்துக்கு என்பதல்லக் காரணம், ஐக்கிய மாகாணத்துச சர்க்காரின் இந்த நடவடிக்கைகள்.

கும்பமேளா—உற்சவம் பிப்ரவரி மாதம் 15ந் தேதியிலிருந்து மே 3-ந்தே முடிய நடைபெறப் போகிறதாம்! அதற்குத்தான் இந்த ஏற்பாடுகள்!!

30,000 டன் உணவுப் பொருள் 15 லட்சம் மக்களின் பசியைப் போக்கக்கூடியதாகும். இவ்வளவு உணவுப் பொருளைச் சேர்த்து வைக்குமாறு உத்தரவிட்டிருக்கிறார்கள், இதற்கென 15 லட்சம் ரூபாய் பணத்தை ஒதுக்கிவைத்து, புதுத் தானிய விற்பனைக் கடைகள் திறந்து வைக்கப்பட்டு, சர்க்காராலேயேநடத்தப் பெறுமாம்!

அரித்துவாரத்துக்கு 50க்கு மேற்பட்ட விசேஷ ரயில்கள் விடப்படுமாம்! அதோடு கங்கையின் கரைகள் எல்லாம், கும்பமேளா நடைபெறும் இடத்திற்கு போகும் பாதைகள், ரோடுகள் எல்லாம் சீர்திருத்திச் செப்பனிடப்படுமாம்! இந்தத் திருப்பணியைக் கவனிக்கும் பொறுப்பை மராமத்திலாகா மேற்கொள்ளுமாறு, சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

கும்ப மேளாவுக்கு வரும் யாத்ரீகர்கள், தங்க இடவசதி வேண்டுமல்லவா! அதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டாமா? அவைகளையும் கவனிக்குமாறு, அதிகாரிகளுக்கு உத்தரவிட்டிருக்கிறது! ஒரு உற்சவத்துக்கு—ஒரு சர்க்கார் — இவ்வளவு சிரத்தையும் பொறுப்பும் காட்டி ஏற்பாடுகளைச் செய்கிறது, மக்களின் பணத்தைக்கொண்டு, அவர்கள் இல்லையே, கிடைக்குமா என்று ஏங்கித் தவிக்கும் உணவுப் பொருள்களைக் கொண்டு!

கும்பமேளா — என்பது, இங்கு குடந்தையில நடைபெறுகிறதல்லவா மகாமகம்! அதைப் போன்ற ஒரு வீண்விழாவாகும். அதற்குத்தான, இத்தனை ஏற்பாடுகளும் செய்யப்படுகின்றன—ஒரு அரசாங்கத்தின் மேற்பார்வையில்—செலவில்!

கும்பமேளாவுக்கு — இவ்வளவு நேரத்தையும் நிதியையும் உணவுப் பொருளையும் கொட்டுவதில் ஆர்வத்தையும் ஆவலையும் காட்டுகிறது ஒரு அரசாங்கம், அது ஆச்சரியமில்லைதான், இந்த 'இராம ராஜ்யத்தில்!'

* * *

கும்பமேளா—கொண்டாடுவதற்கு ஆட்சியாளர் இவ்வளவு சிரத்தை காட்டுகிறார்கள்! பூலோகத்தில் மக்கள் கஷ்டப்படுகிறார்களே, 'புண்யத்தைச் சம்பாதித்துக் கொண்டு, சுவர்க்கலோகத்திலாவது சுகம் பெறட்டும் என்ற கருணையால் போலும்!

இந்தக்கும்பமேளா—ஒரு குருட்டு நம்பிக்கையும், மனதிலும் எண்ண முடியாத வீண் செலவை விழுங்கும் தன்மையும் கொண்ட ஒரு வீண் விழாவாகும்.

காஷாயம் அணிந்தோர், சந்நியாசிகள், உலகத்தை வெறுத்தோர், ஆகியோரைப் பூஜித்தால், பலன் கிடைக்கும், புண்யம் ஏற்படும் என்ற மூட நம்பிக்கையின் விளைவுகளில் ஒன்று—இந்த வீண் விழா! கும்பமேளா—கண்டுவந்தவர்களைக் கேட்டால் கிடைக்கும் விபரங்கள் வேடிக்கையா கமட்டுமல்ல, விசித்திரம் வேதனை ஆகியவைகள் கலந்ததாயிருக்கிறது!

லட்டு, மிட்டாய், உணவு எல்லாவற்றையும் 'புண்யம்' சம்பாதிக்கும் கோடீஸ்வரர்கள் குவித்துவைத்து, மேளாநடக்கும் நாட்களில் தானம் செய்வார்களாம்—சந்நியாசிகளுக்கு! இந்த மேளா நாட்களில், கோலம் செய்து காஷாயம் உடுத்தவன், குடும்பம்வெறுத்துத் தாடிவளர்த்து சந்நியாசியானவன், வாழ தெரியாது சாமியாரானவன் என்ற பல ரகச் சாமியார்கள் எல்லாம் வந்து குவிந்து கிடப்பார்களாம். அவர்களில் அரை நிர்வாணச் சாமிகள், முழு நிர்வாணச் சாமிகள், உடையுடுக்காதவர்கள் உணர்ச்சியைச் சாகடிக்க 'ஆண்குறிகளை' இரும்பு வளையங்களால் கட்டிய 'மகாமுனிவர்கள்' எல்லாம்கூடியிருப்பார்களாம் —பல்லாயிரக் கணக்கில். இவர்களைப் பூஜித்து, தானம் வழங்கி போற்றிச் செல்வதுதான் இந்த விழாவின் 'மகிமை'யாம்! இந்த விழா—பன்னிரண்டு ஆண்டுகளுக்கு



ஒரு முறை நடைபெறுவதுண்டு, வட இந்தியாவில் கங்கை ஓடும் இடங்களில். அதில் முக்கியமானதெனக் கருதப்படுவது ஹரித்துவாரத்தில் நடைபெறும் இந்த மேளா விழா.

இந்த விழாவுக்கு ஏராளமான 'பக்தர்'கள் வந்துகூடி, சந்நியாசிகளையும் சாதுக்களையும் தரிசித்து, காணிக்கை செலுத்திவிட்டு, கங்கையில் "ஸ்நானம்" செய்து விட்டுத் திரும்புவார்களாம். இப்படிச் செய்தால், புண்யமும் போக போக்கியமும் ஏற்படும் என்ற மூடநம்பிக்கையால், பொதுமக்களில், பணக்காரர்களுடைய பணம் ஆயிரக்கணக்கிலும், சிற்றரசர்கள் சமஸ்தானதிபதிகளின் செல்வம் இலட்சக்கணக்கிலும், ஏழைமக்களின் வியர்வைசிந்தி உழைத்துச் சேமித்த பணம்காசுக் கணக்கிலும், இவ்விழாவின் போது—சந்நியாசிகளுக்கும் 'சகலமும்' துறந்த முனிபுங்கவர்களுக்கும் சமர்ப்பிக்கப்படுவதுண்டாம்.

வேடிக்கையல்ல, மேளாவுக்குச் சென்றுவந்த முன்னாள் சாமியார், இந்நாள் 'அடிகளார்' ஒருவர் தருகின்ற தகவல்கள் இவை! இவ்வளவு கோலாகலமும், அரித்துவாரம், பிரயாகை போன்ற இடங்களில் நடைபெறுகின்றன — கும்பமேளாவின்போது. இந்த விழாவின் விளைவாகச் சீரழியும் செல்வமும், வளரும் வியாதியும், ஏற்படும் தொல்லையும் இவ்வளவு என்று சொல்ல முடியாதாம்!

* * *

சாமியாரைத் தரிசித்து, கங்கையில் மூழ்கினால், புண்யம் கிடைக்கும், பாவம் தொலையும், புத்திர சந்தானம் ஏற்படும், போக போக்கியங்கள் கிடைக்கும் என்ற மூடநம்பிக்கையின் விளைவாக நடைபெறும் இந்த விழாவைச் சிறப்புற நடத்தி வைக்கும் சேவையிலிறங்கி யிருக்கிறது—ஐக்கிய மாகாண அரசாங்கம்.

பக்தகோடிகள் பாவத்தைத் தொலைக்க இவ்வளவு வழியையும் வசதியையும் செய்து கொடுக்க ஏற்பாடுகளைச் செய்கிறார்களே, இவர்கள், பிறப்பித்திருக்கும் இன்னொரு உத்தரவைக் கேட்டால் வேடிக்கையாகஇருக்கும்!

'பதினாறும் பெற்றுச் சுகவாழ்வு வாழவேண்டும்! என்று, புண்யம் சம்பாதித்து இறைவனடி சேர ஏகும் யாத்ரீகர்கள், ஊருக்குள் நுழையும் போது, ஒவ்வொருவரும் ஊசிபோட்டுக்கொள்ள வேண்டுமாம்—காலரா ஏற்பட்டு, அது பரவாமல் இருக்க வேண்டுமென்பதற்காக. இதற்கும் இதுபோன்ற இன்ன பிற நோய் தடுப்பு நடவடிக்கைகளுக்காகவுந்தான், ஐ. மா. சர்க்கார் எட்டு லட்ச ரூபாய்களை ஒதுக்கியுள்ளனர்!

கடவுள் காப்பாற்றுவார், என்ற நம்பிக்கையின் பேரில் அவர் அருள் பெற்று 'புண்யம்' தேடப்போகும், பக்தகோடிகளுக்கு. அதை நம்பி வசதிகள் செய்து தரும் அரசாங்கம், 'ஊசி' போட்டுக்கொள்ளுங்கள், இல்லாவிடில் உயிரைக் கொல்லும் வியாதிபரவிவிடும்' என்று உத்தரவிடுகிறது, ஊர்ப்பணத்தை அதற்காக ஒதுக்குகிறது!

இவ்வளவு சிரத்தையுடன் மத நம்பிக்கையையும், அதன் பேரில் ஏற்பட்ட கும்பமேளாவையும் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்படுகிறதே — சென்ற அர்த்தமேளா நடைபெற்றபொழுது அங்கு என்ன நடைபெற்றிருக்கிறது தெரியுமா!

கங்கையைப் பூஜிக்க வந்தவர்களை, 'அக்கினி பகவான்' பூஜித்திருக்கிறார்—மாபெரும் தீ விபத்து ஏற்பட்டு அங்கு போடப்பட்டிருந்த கீற்றுப்பந்தல்களும்,கருகிச்சாம்பல் ஆயிற்று. வந்த 'பக்த சிகாமணிகள்' தீயில் சிக்கி, திகைத்து ஓடவழி தெரியாது திண்டாடி அவதிக்குள்ளாகினர்! ஆண்டவனுக்குத் திருப்தி செய்யச் சென்ற அடியவர்களாலோ, அல்லது அவர்கள் பூஜித்துக் காணிக்கைச் செலுத்திய அடியார்களாலோ—அத் தீயை அணைக்க முடியவில்லையாம்! பாவம், பாபாத்மாக்களைப் பரலோகத்துக்கு அனுப்ப மட்டும் 'சக்தி'யிருக்கிறதே யொழிய, சுட்டெரிக்கும் நெருப்பையும், சூழ்ந்துவரும் வியாதியையும் தடுக்க 'அருள்' இல்லைப் போலும்! அதற்கு மட்டும் 'அதிகாரிகள்' தயவுவேண்டியிருந்திருக்கிறது!

* * *

காலத்தையும், மக்கள் மதியையும், அவர்கள் பணத்தையும் வீணாக்கும் இந்த மூழுக்கு விழா, மூடநம்பிக்கையின் விளைவாகக் கொண்டாடப்படுகிறது. இதனால் ஏற்படும் சேதமும், செலவும், சிக்கலும், திண்டாட்டமும் தெரிந்திருந்தும் சர்க்கார் இவைகளுக்கு ஆதரவு தருகிறது! லட்சக்கணக்கில் பணத்தையும், டன் கணக்கில் உணவுப் பொருளையும், உருக்குலைக்கிறது — பரிதவிக்கும் மக்களுக்குப் பயன்படாமல் 'பக்தி மார்க்கம்' என்றெண்ணிப் பாழாக்குகிறது!

12-ம் பக்கத்தொடர்ச்சி

எண்ணம் தோன்றியதன் விளைவாகவோ என்னவோ இக் கேள்வியைக் கேட்டிருக்கிறார் இந்தியப் பிரதமரை நோக்கி, சட்டசபையில்!

அதற்குப் பண்டிதர் தந்த பதில் என்ன தெரியுமா, "சுற்றுப் பிரயாணம் செய்தால் என்ன? இன்னும் அதிக இடங்களில் சுற்றுப்பிரயாணம் செய்யுமாறு உத்தரவிடப் போகிறேன்" என்பது! எப்படியிருக்கிறது, பவனி அவசியமா என்று கேட்கிறார், உறுப்பினர்—பதிலோ அதிக ஊர் சுற்றுமாறு ஆக்ஞை பிறப்பிக்கப் போகிறேன் என்பது!

அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் அதிக தொடர்பும் நேசமும் ஏற்பட அப்படி, ஒவ்வொரு இடத்துக்கும் "விஜயம்" செய்வது அவசியமாம்—கூறுகிறார், இப்போது தான் அமெரிக்கா சென்று அமோக ஆதரவும் நேசமும் பெற்றுவந்ததாகக் கூறப்படும் நேரு!

சகோதரியார் என்பதால் சலுகையா — என்ற நோக்கத்தில்கூடக் கேள்வி கேட்கப்பட்டிருக்கலாம். அதற்கு ஒரு உபகண்டத்துப் பிரதமர் இப்படியா பதிலளிப்பது— அதுவும், இதுவரை செலவழிந்தது பிரமாதமல்ல, இன்னும்செலவழியும் வகையில் சுற்றுப்பிரயாணம் செய்யுமாறு சொல்லப்போகிறேன், நீ யார் கேட்க என்ற தோரணையில!

மக்கள் வாழ்வை வளமாக்கும் கல்வித்துறைக்குச் செலவிடும்பணம் குறைக்கப்படுகிறது பண நெருக்கடி என்ற காரணத்தின் மீது அதே வேளையில், அவசியமில்லாத ஆடம்பர ஆர்ப்பரிப்புக்காக ஓரிடத்தில் பணம் அனுமதிக்கப்படுகிறது!

இந்த வேடிக்கையை என்னென்று வர்ணிப்பது!

ஆளவந்தாரின் 'சொந்தக்காரர்கள்' சுகபோகம் அனுபவிக்கும் 'சுகராஜ்யம்' என்றா? அல்லது சுயராஜ்யம்' என்றா!

திராவிட நாடு

ஞாயிறு] 18—12—49 [காஞ்சி

## விந்தையல்ல வேதனை

நேரு சர்க்கார் ஒழிக!
காந்திக் குல்லாய்கள் தீக்கிரை!
தலைவர்கள் படங்கள் தகனம்!
கொடும்பாவி கட்டி இழுத்தனர்!
சுற்றிவந்து மாரடித்தனர்!

* * *

போலீஸ் படைகள் பாதுகாப்பு!
சட்ட மந்திரி வீட்டில் பந்தோபஸ்து!
கண்ணீர் வாயுப் பிரயோகம்!
தடியடி நடத்தவும் நேர்ந்தது!

* * *

பெண்மணிகளும் ஆரவாரித்தனர்!
சாவு வீடுபோல் மாரடித்து அழுதனர்!
சில கடைகளில் கூட 'ஹர்த்தால்'!

* * *

எங்கேயாவது தொழிலாளர் வேலை நிறுத்தமோ, கூலி போதவில்லை, கும்பி கழுவ வழியில்லை என்று அவர்கள் குமுறி எழுந்தன் விளைவோ! அல்லது ஆட்சியாளரின் எதேச்சாதிகாரத்தை எதிர்த்து எக்கட்சியினரோ, நடத்திய, சட்டமறுப்பு அமளியோ! நாங்கள் உழைக்கிறோம்—யாரோ உண்டு கொழுக்கிறான், இதைச்சகிக்க முடியாது, சமநீதி வேண்டும் என்று பாட்டாளி உலகம் நடத்திய போராட்டமோ! புகையும் எரிமலை போல் பொதுமக்கள்தான் இந்தச் சர்க்கார் எவ்வளவு வரி வாங்கியும் எங்களுக்கு நன்மை செய்யவில்லை, வாழ்வைச் சிதைத்துச் சித்திரவதை யாக்குகிறது, என்றுவெகுண்டெழுந்ததன் விளைவோ! என்று கேட்கத்தோன்றலாம்-இல்லை! 'சாமான்ய மான—மாயலோக பந்தம்' கொண்ட காரியங்களல்லவா அவை! அவைகளுக்காக நடைபெற்றது அல்ல, இந்த அமளி, அட்டகாசம், அல்லோலம் அத்துணையும்!

மதத்தைக் காப்பாற்ற!
இந்து மதத்தைக் காப்பாற்ற!

நடைபெற்ற 'புரட்சி'தான், போர்க்கோலம் தான் நாம்மேலே சித்தரித்திருப்பது! கொடும்பாவி கட்டியிழுத்தனராம், குழந்தைகளோடு பெண்மணிகள் கொண்டுவந்து நிறுத்தப்பட்டனராம், காந்தி குல்லாய்களும், காங்கிரஸ் தலைவர் படமும் கொளுத்தப்பட்டனவாம்! அந்த நெருப்பைச் சுற்றிவந்து, அழைத்து வரப்பட்ட பெண்கள், மாரடித்து அழுதனராம், செத்த வீடெனக் கதறினராம்!

இது ஒரு புறத்தில் நடக்க, இன்னொரு பக்கத்தில், சத்யாக்கிரகம் நடைபெற்றதாம் — சனாதனிகளால், வைதிக புரியினரால்,

மதத்தின் பக்கம் நெருங்காதே!
இந்து மதத்தைத் திருத்தாதே!

என்ற முழக்கங்களுடன்! சம்பவம், இந்த வாரம் டெல்லிமா நகரில், இந்தியச் சட்ட சபைக்கு முன் நடந்திருக்கிறது! 500 பேருக்கு மேல் அழைத்துவரப்பட்டு, ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டதாம், உறுப்பினர்களைச் சட்ட சபைக்குள் போகவிடாமல் தடுத்தனராம்! போலீஸ் இல்லையென்றால் அன்று நிலைமை மோசமாகி இருக்குமாம்! அவ்வளவு ஆத்திரத்துடன், ஆர்ப்பாட்டம் நடந்திருக்கிறது, சனாதனச் சூரர்களால், இந்து மதவாதிகளால், இந்து சட்டத்தொகுப்பு மசோதா கூடாது என்று கோரி!

இந்திய சட்ட சபையில், இந்து மதச் சட்டத்தில் சில திருத்தங்கள் செய்து, ஒரு மசோதா நிறைவேற்றப் படும் தருவாயிலிருக்கிறது. அம் மசோதா, முதல் முறை படிக்கப்பட்டு, சபையாரால் ஏற்கப்பட்டு இப்போது இரண்டாம் முறை படிக்கப் பட்டுச் சட்டமாகும் தருவாயில் இருக்கிறது.

இந்த மசோதாவை எதிர்த்துத்தான், ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கிறார்கள் 'நேரு சர்க்கார் ஒழிக!' என்ற முழக்கத்துடன்! பெண்மணிகளை அழைத்து வந்து மாரடிக்கச் சொல்லியிருக்கிறார்கள், மகா மோசமான செயல்களில் இறங்கியிருக்கிறார்கள்—சனாதனிகள், வைதிக வம்பர்கள்!

இந்து மதச் சட்டத் தொகுப்பு மசோதா, இவர்கள் செய்கிறார்களே, அந்த அளவுக்கு எந்தவிதமான பெரிய புரட்சிகரமான காரியமல்ல. இந்த மசோதா சட்டமாவதால், இந்து மதம் என்கிற விஷ விருட்சம், ஒன்றும் விழுந்துவிடப் போவதில்லை—இருந்தும் "இவர்கள்" இவ்வளவு அமர்க்களப்படுத்தி இருக்கிறார்கள்.

மேற்படி மசோதா சட்டசபையில் சட்ட மந்திரி டாக்டர் அம்பேத்கரால் பிரேரேபிக்கப்பட்டநாள்முதல், டெல்லியிலே நடைபெற்ற ஆர்ப்பாட்டதினம் வரை, அம்மசோதா மீதுசிறிவிழாத வைதிகர்கள் இல்லை. கண்டிக்காத மத பக்தர்கள் கிடையாது. சங்கராச்சாரியின் கண்டனமும், சனாதனிகளின் கோபம், 'சாஸ்திரம் போச்சே, போச்சே!' என்று ஓலமிடும் வக்கிரபுத்தியினரின் உரத்த கூச்சல் அத்தனையும் எழும்பிக்கொண்டுதான் இருக்கிறது! அவர்கள்,இதுவரை,ஈடுபட்டுநடத்தியிருக்கும் ஆர்ப்பரிப்பு, அட்டகாசம், ஓமம் வளர்த்து கூடிநின்று 'மாநாடு' கூட்டி நிறைவேற்றிய தீர்மானம் ஆகியவைகளைச் சிந்தித்தால், எவருக்கும், இந்துமதத்திற்கே ஆபத்து வந்துவிட்டது போலும், அதுதான் இப்படி இவர்கள் அலறித்து துடிக்கின்றனர் என்று நினைக்கத் தோன்றும்—அந்த அளவுக்கு இத்திருத்த மசோதாவை எதிர்க்கின்றனர், சங்கராச்சாரி முதல் சாதாரண சாம்பிராணிக் குருக்கள்வரை இம்மசோதா மீது, பாய்ந்திருக்கின்றனர்.

அதுமட்டுமல்ல, சட்ட சபையில் கூடக் காங்கிரஸ் உறுப்பினர்களிடமிருந்து இம் மசோதாவுக்குக் கிளம்பியிருக்கும் எதிர்ப்பும், எக்காளமும் கொஞ்ச நஞ்சமல்ல! இது வரை, கொட்டாவி விடுவதற்கன்றி, ஒருபோதும் வாய் திறந்தும் அறியாத 'நிபுணர்கள்' கூடப் பேசியிருக்கின்றனர்—இப்படிச் செய்யலாமா,



சர்க்கார் மத விவகாரங்களில் தலையிடலாமா என்று! சாதாரண 'சாமான்யர்கள்' என்று மட்டுமல்ல, இந்திய உபகண்டத்தை ஆட்டிவைக்கும் ஸ்தாபனமாகிய காங்கிரசின் தலைவராகிய டாக்டர் பட்டாபி—நாடறிந்த நல்லவர்-என்று போற்றப் படுபவர் கூட இம்மசோதாவை இப்போது நிறைவேற்றுதல் கூடாது என்று கூறியுள்ளார்! இந்தியாவின் புது அரசியலைத் தயாரித்த அ. நி. சபையின் தலைவரான டாக்டர் ராஜேந்திர பிரசாத்—உத்தமர், உலகறிந்தவர் எனப்படுபவரான அவரும் - இம் மசோதாவை மக்கள் சம்மதத்துக்கு விடவேண்டுமென்று கூறியிருக்கிறார்!

அதுமட்டுமல்ல, "இம் மசோதா நிறைவேறவில்லையென்றால் நானும் எனது சர்க்காரும் ராஜினாமா செய்வோம். இதுஉறுதி!" என்றுஇந்தியப் பிரதமர், காங்கிரஸ் ஜோதி, பண்டித ஜவஹர் கூட எச்சரிக்கை, செய்யுமளவுக்கு வளர்ந்திருக்கிறது—இம் மசோதாவுக்கு சனாதனிகளும், வைதிகர்களும், அவர் சொல் கேட்டு ஆடும் சட்டசபை உறுப்பினர்களும் எழுப்பும் ஆரவாரமும் கூச்சலும்!

இவரை விட்டால்வேறு யாருண்டு தலைமை தாங்க, என்று போற்றப் படும் நேருவே எச்சரிக்கை செய்ய வேண்டிய அளவுக்கு, ஒரு மசோதா இருக்கிறதென்றால், அது ஏதோ ஒரு பெருத்தமாற்றம் செய்யக் கூடியதாகத்தானே இருக்கவேண்டும், இல்லாவிட்டால் இப்படியெல்லாம் ஏற்படுமா என்றஎண்ணம் எவருக்கும் எழும்பத்தான் செய்யும்!

பலதார மணம் கூடாது.
ஏகதார மணமே செல்லுபடியாகும்.
திருமண ரத்துரிமை உண்டு.
பெண்களுக்கும் சொத்துரிமை உண்டு.

இதுதான், இவ்வளவு எதிர்ப்புக்கும் அமளிக்கும் உள்ளாகியிருக்கிறதே இந்த மசோதா, அதிலுள்ள முக்கிய அம்சங்கள்! இதற்குத்தான் இவ்வளவு அட்டகாசமும், ஆர்ப்பாட்டமும் நடைபெறுகிறது! மதத்தின் தலையில் கைவைத்து விட்டார்கள், மத விவகாரங்களில் தலையிட்டு விட்டார்கள், எல்லாம் போய்விட்டது, மதம் மாய்க்கப்படுகிறது என்று உயர்ந்த தலைவர் முதல் உட்கார்ந்த இடம் பெயராத ஊர்க்கோடி சாஸ்திரிகள் வரை எதிர்க்கிறார்கள்!

இந்த மசோதாவில் கொண்டு வரப்பட்டிருக்கும் அம்சங்கள் மறுக்கவோ, ஏற்க முடியாதென்றோ, இன்னல் விளைவிக்குமென்றோ கூற முடியாது! அத்தனையும் அவசியமானதுதான் — வளர்ந்துகொண்டு வரும் உலகுக்கு! இருந்தும் எதிர்க்கிறார்கள் — எத்தனையோ முறை இந்தச் சீர்திருத்தங்கள் இந்து மதத்தின் பெருமைக்குத்தான், இடிந்துகொண்டிருக்கும் இந்துமதம் என்ற மண்டபத்தை நிமிர்த்த உதவும் தூண்கள் தான், என்றெல்லாம் மசோதாவைக் கொண்டு வந்தவர்கள் பன்முறை எடுத்துச் சொல்லியும்!

இருந்தும் எதிர்க்கிறார்கள்—யார்? பொதுமக்களல்ல! — சிலர்! யார், அந்தச் சிலர்? ஏன், அவர்கள் எதிர்க்கவேண்டும்! இந்தக் கேள்விகளில் கிடைக்கும் விடையிருக்கிறதே, அதில்தான் சூட்சமம் இருக்கிறது.

* * *

பழைமை, வைதிகம் இரண்டும் இங்குள்ள பலரின் வாழ்க்கையை வளமாக்கும் வயல்களாகி விட்டன. இவைகளின் தாய், பாதுகாக்கும் கோட்டையாக யிருப்பது மதம்—இந்து மதம். எனவே இந்து மதம் தங்களுடைய பரம்பரைச் சொந்தச் சொத்து — சுரண்டல் வலை என்று எண்ணிக்கொண்டு இங்குள்ள சனாதனமும் வைதிகமும் மகிழ்ந்து கொண்டிருக்கிறது. இன்றுள்ள இந்தியச் சட்டமோ, மக்களின் பாதையை வகுத்துக் காட்டும் சட்டமோ, இந்து மதக் காவலர்களான மனு, யாக்ஞவல்யர் ஆகியோர் அன்று செய்து வைத்துவிட்டுப் போனதாகும். அவர்கள் அக்காலத்தில், தங்களுக்குத் தெரிந்ததைச் சட்டதிட்டம் எனச் செய்துவைத்தார்கள்—பின் ஆங்கிலேயர் வந்ததும், அவைகளில் சிற்சில மாறுதல்களை மட்டும்செய்து, அந்தப் பழைய நூல்களில் கூறப்பட்ட விதிகளே, இந்நாட்டு மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய சட்டம் என்று வைக்கப்பட்டது—இன்னும் இருக்கிறது – இன்றைய அரசாங்கம் இருக்கும் வரை அதே சட்டங்கள் நீடிக்கத்தான் போகின்றன!

மனுஸ்மிருதியும் புராதன இந்து மதச் சட்ட திட்டங்களும் "சிலர்" வாழ்வு எப்போதும் மலர்ந்து மணம் வீசும் வகையிலேயே சிருஷ்டிக்கப் பட்டதாகும். இந்து மதம்—என் பதை மீறிச் செல்ல முடியாதவகையில், போடப்பட்ட வேலிகள்தான் இந்தச் சட்டதிட்டங்கள். ஆகவே, நாட்டுக்குநல்லது,அவசியம்தேவைப் படுவது என்று எண்ணி மதத்தைப் பாதிக்கவும் நினையாத அளவில் அந்தச் சட்டதிட்டங்களில், சில மாறுதல்களைச் செய்ய எண்ணிய தும், சீறிடும் புலிகளாக ஆகியிருக்கின்றனர் – பழைமையின் காவலர்களும், வைதிகபுரி வாழ்வினரும் தங்கள் சுகபோகம் பறிக்கப்படுமோ வென்ற பயத்தால்!

அவர்களுக்கு அச்சம் ஊட்டும் வகையுள்ளதா இந்த மசோதா, அடாது செய்வதா, வாழ்வைச் சூறையாடுவதா என்றால், 'இம்மி' கூட இந்த மசோதாவால் அவர்கள் சுகபோகச் சுரண்டலுக்கு இடைஞ்சல் எதுவும் ஏற்படாது – ஏற்படமுடியாது! இருந்தும், எதிர்க்கிறார்கள், பழைய சம்பிரதாயமும், சாஸ்திர விதிகளும் சீர்குலைக்கப்பட்டு விடுமாம்! அன்று கட்டிவைத்த சூதுபுரிக் கோட்டை–இந்து மதம்–அதில் எவருமே நுழையக் கூடாதாம் – எதிர்க்கின்றனர், எக்காளமிடுகின்றனர். அதுவும் 'இந்த' சர்க்காரைப் பார்த்து!

இந்தச் சர்க்கார் புரட்சியுள்ளம், சீர்திருத்தவேகம், மதக் கேடுகள் மாய்க்கப்பட்டு மனிதவாழ்வு சிறப்பிக்கப்படவேண்டும் என்ற ஆசை கொண்டு, முன்னேற்ற நோக்கம் கொண்டு, மாறுதல்களைச் சமுதாயத்திலே சிருஷ்டிக்கும் நோக்கம் கொண்டதல்ல. பழையசம்பிரதாயம், பண்பாடு, குறையாது நடக்கவேண்டும், அதுதான் கலாச்சாரம் என்ற கருத்துக்கொண்டது. அத்தகைய பிற்போக்கு வாதிகளும், மத பக்தர்களும், நிறைந்த இந்த ஆட்சியைப் போய், இவர்கள் மிரட்டுகிறார்கள்! ஆட்சியாளர் யாவரும், இவர்களுடைய கண்டுவிரலுக்காடும் நிலையிலிருந்தும்–இந்து மதத்தைஎவ்வகையிலும் தொடக்கூடச் செய்யாத ஒரு–சில திருத்தங்களைச் செய்வதற்காக

இத்துணை ஆர்ப்பாட்டங்கள் நடத்தியிருக்கின்றனர் — பழைமை மாறக் கூடாது, புதுமை எதுவும் மலரக் கூடாது என்ற ஆவேசத்தால்!

மனு, மாந்தாதா செய்து வைத்துப்போன சாஸ்திர விதிகளில் சாமான்யாளான இவர்கள் தலையிடுவதா-நன்மை பயக்கக் கூடியதாகத்தான் இருக்கட்டும்-இவர்கள் ஸ்மிருதிகளிலும் உபநிஷத்களிலும் கூறப்பட்ட முறைகளை மாற்ற முயற்சிக்கலாமோ! கணவனுக்கும் மனைவிக்கும் ஒத்துவரவில்லை, ஏறுமாறாகயிருக்கிறது என்றால் 'ரத்து' செய்து கொண்டுவிடலாமாம்! சட்டம் செய்யப் புறப்பட்டுவிட்டா, இவாள்—என்ன தெரியும், இதுகளுக்கு—லௌகிக விஷயங்களில் புரண்டு கொண்டிருக்கும் பாபாத்மாக்களல்லவா 'இதுகள்' என்று கூறிக்கொண்டு இம்மசோதாவை எதிர்த்து பழைமைச் சனாதனமும், வைதிக வம்பும் கச்சை கட்டிக்கொண்டு நிற்கிறது!

அந்த அளவுக்குமதபக்தி—வெறி—தலைவிரித்தாடுகிறது, பழைமையில் மாறுதல்ஏற்படக்கூடாது என்ற துட்ட மனோபாவம் நர்த்தனம் புரிகிறது!

X X X

மதவெறி மக்களை மாய்க்கும், புது வழிகாணமுடியாது தடுத்துப் பொல்லாங்குகளை உண்டாக்கும், புதுமைக்கு அணைகட்டி வரவிடாது தடுக்கும், நம்மைக் காட்டுமிராண்டிக் காலத்துக்கு கொண்டு செல்லும்! வாழ்வை வளமாக்காது, நாசத்தையும் கேட்டையும் நாட்டுக்கு நல்கும்!

மதம்—ஒரு மாபெரும் நச்சுக் கோப்பை. அதில் விழுந்த ஈக்களாக மக்கள் இருக்கக் கூடாது. மதநஞ்சு அருந்தி மயங்கி, சுருண்டு, எல்லாம் இதில்தான் அடக்கம் என்று கூறிக்கொண்டு 'மாயப்பிரபஞ்சம் இது பொல்லாது, உலகம் மாயை, சகலமும் அநித்தியம்,' என்று கூறிக்கொண்டு, காஷயமும் கமண்டலமும் ஏந்தச் செய்யும்! நாட்டை அரித்து, அலைத்துக் குலைக்கும் என்று பகுத்தறிவாளர்களாகிய நாம், சுயமரியாதை இயக்கம் சொல்லி வருகிறது.

பழைமையும், வைதிகமும் ஒழிய வேண்டும் பகுத்தறிவு எங்கும் முகிழ்க்கவேண்டும் என்று பன்னெடுங் காலமாகப் பணியாற்றி வருகிறது.

வைதிக வாடை—மிகக்கொடியது! மூடநம்பிக்கை, முன்னேற்றத்தைத் தடுக்கும் முட்டுக்கட்டை, மதம் நம் வாழ்வைச் சிதைத்துச்சீர்குலைக்கும் திராவகத்தை செய்யும் மரணக் குழி என்று சொல்லி, இவைகள் மக்கள் மனதிலிருந்து மாற்றப்பட்டால்தான் இன்பம் எங்கும் ஏற்படும், சாதிசமயப் பூசல்கள் என்ற சாக்கடை தூர்க்கப்படும், சமரச சன்மார்க்கம் தழைத்தோங்கும் என்று எடுத்துக் காட்டி, பணியாற்றி வருகிறது. இந்த அரும் பணியைச்செய்யப்புறப்பட்டமைக்கு, செய்துவருவதற்கு, நமக்கு இந்நாட்டு வைதிகமும் பழைமையும் தந்த பட்டம் 'நாஸ்திகர்கள்'—நல்லது நினைக்காதவர்கள், நாட்டுத் துரோகிகள் என்பது!

நமது நாட்டுப் பணிக்கு, ஏச்சும் பேச்சும் வம்பும் வழக்கும் கிளப்பிய போதெல்லாம் சனாதனம் நம்மிடம் சண்டைக்கு வருகிறது—வரத்தான் செய்யும்! என்று எடுத்துக் காட்டிவிட்டு, எப்போதும் பழைமையும் வைதிகமும் இதுபோன்ற பணிகளைக் கண்டதும் படபடக்கத்தான் செய்யும், துடிக்கத்தான் தொடங்கும்—அவர்கள் சூது வாழ்வு புதுமையால் ஒழிக்கப்படப்போவதால்! என்று, விளக்கி வந்துள்ளோம். அதுபோதெல்லாம், நம்மைத் தூற்றவும், நாட்டுத்துரோகிகள் என்று அழைக்கவுமே, அறிஞர்கள் என்று அழைக்கப்பட்டோரும், அரசியல் தலைவர்களும் முற்பட்டனர்! பட்டங்கள் வழங்கினர்!! கண்டதுமே நடுங்க வேண்டிய பூச்சாண்டிகள் போல நம்மை நாடு கருதும்படி செய்தனர்!

பழைமையும், மதவெறியும் நாட்டைப் பீடிக்கும் சனியன்கள், இன்ப வாழ்வு என்கிற பகலவனை மறைக்கும் கார்மேகங்கள் என்று நாம் கூறியபோது, இங்குள்ளோர், 'இல்லை—அது வாழ்வை வளமாக்கும் மழை என்றனர்! நாமோ மழையல்ல—மண்மாரி என்று கூறினோம்! இவை சிறிதும் சிறுத்தைகள்—சிறு மாறுதல் செய்யப் புறப்பட்டாலும் சீறிப் புறப்படும், சீற்றத்தைச் சிந்தும் என்று சொன்னோம்—சொல்லி வருகிறோம்.!!

இந்த உண்மை விளக்கத்துக்கு ஊராரும் நாட்டாரும் நமக்கு நல்கிய பரிசுகள்—கொடுமை மூட்டைகள் தான். கடுகடுப்பு, 'காணடா இந்த வீர சிங்கங்களை' என்றகேலி, திருத்தப் புறப்பட்டு விட்டார்களாமே, பழைய வழக்கங்களை' என்ற கிண்டல், பாவிகள் ரௌரவாதி நரகம் தான் இதுகளுக்கு என்ற பட்ட மளிப்பு, மதத் துரோகிகள், மனித மிருகங்கள் என்ற வசைபுராணம்!

ஒரு சிறு திருத்தத்தை, இந்துச் சட்டத்தில், செய்வதற்காக டெல்லி சட்டசபையிலே புயல் வீசியிருக்கிறது, கேலி, கிண்டல், கண்டனம், ஆகிய அம்புகள் வீசப்பட்டிருக்கின்றன. வெளியிலே 'நேரு சர்க்கார் ஒழிக!' என்று ஆர்ப்பாட்டம் இட்டிருக்கிறார்களே, அதன் எதிரொலி, சட்டசபைக்குள்ளும் ஒலித்திருக்கிறது.

மசோதா மீது பேசிய பெரும்பாலான காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள் தலைவர்கள், இந்த மசோதாவை இப்போது கொண்டு வந்திருக்கக் கூடாது, இதை ஒத்திப் போடவேண்டும், என்ன அவசியம் ஏற்பட்டிருக்கிறது இப்போது என்று கண்டனங்களையே குவித்திருக்கின்றனர். காங்கிரஸ் தலைவர் உள்பட, பெரிய தலைவர் என்று கூறப்படும் பிரசாத் வரை, எதிர்த்திருக்கின்றனர் 'ஏன் இது' என்று கேட்டிருக்கின்றனர்!

தங்கள் தலைவர், நாட்டின் பிரதமர் சக்தியும் புத்தியும் நிறைந்தவர் என்று போற்றப்பட்டவரான பண்டித நேரு, இம்மசோதா நிறைவேற்றப்படாவிட்டால் எனது சர்க்கார் ராஜினாமா செய்யும் என்று எச்சரித்திருந்தும், எதிர்த்திருக்கின்றனர்—வெடித்துக் கிளம்பிய எரிமலை போன்று கனல்கக்கியிருக்கின்றனர்!

வெளியேவைதிகத்தின் மிரட்டல்! உள்ளே உறுப்பினர்களின் அதட்டல்!

பழைய இந்து சட்டத்தில் சிறு திருத்தங்களை, அதுவும் தேவையானது என்றுகருதப்படுகிற திருத்தங்களைச் செய்வதற்கு இத்தனை சிற்றமும், சிங்கநாதமும் கிளம்பியிருக்கிறது 'இவரை விட்டால் ஏது கதி, என்று போற்றப்பட்ட நேரு, இந்த மசோதாவைத் தன் ஆட்சிப் பிரச்னை என்று அறிவிக்கும் அளவுக்கு, இந்தத் திருத்தங்களுக்கு, எதிர்ப்பு



# * 'கல்கி'யார் கவனத்துக்கு! *

''மதவெறியென்னும்ராக்ஷசனும்தருட்டு நம்பிக்கைப் பிசாசும் தேசத்திலிருந்து அடியோடு துரத்தப்படவேண்டும்.

மூட நம்பிக்கையையும் மதப் பற்று தலையும் அடிப்படையாகக் கொண்டு

முன்பக்கத் தொடர்ச்சி

வளர்ந்திருக்கிறது—மத வெறியால், பழைமைப் பக்தியால், வைதீகம் காக்கப்படவேண்டும் என்ற கருத்தால்,

இந்துமத சட்டத் தொகுப்பு மசோதாமீது நடைபெற்று வரும் விவாதம் போல, இதுவரை, இந்திய சட்டசபையின் சரித்திரத்திலேயே நிகழ்ந்ததில்லை.

சனாதனம் சங்கநாதம் செய்கிறது, வைதிகம் உறுமுகிறது — அவைகளின் வக்கீல்களாக நடிக்கின்றனர் காங்கிரஸ் 'கனம்'கள்.

சம்பிரதாய முறையில் சிறு மாறுதலைச் செய்ய முற்படுவதற்கு இவ்வளவு எதிர்ப்பு, எக்காளம், உறுமல், சீற்றம்!

ஏன் இது, எதற்காக இது, எப்படி ஏற்பட்டது இது — சிந்திக்க, சிந்திக்க நம்மை வேதனையும் விம்மலும் துளைக்கிறது. மனித சமுதாயம், தினசரி வளர்ந்துகொண்டிருக்கிறது, வாழ்க்கைப் பிரச்னைகள் விஷுடிக் கொருதரம் மாறிக்கொண்டிருக்கின்றன—

இந்த நேரத்தில்-புதுக்குடியரசு ஏற்படப்போகிறது எனக் காங்கிரஸ் தலைவர்கள் பூரித்துக்கிடக்கும் வேளையில்—மக்கள் நலன்கருதி, பெண்களுக்கு நீதிவழங்கும் நினைப்புடன் செய்யப்படும் ஒரு திருத்த மசோதாவுக்கு இவ்வளவு கண்டனமும் எதிர்ப்பும் கிளம்பியிருக்கிறது!

மதவெறி, பழைமைப்பித்து அந்த அளவுக்கு ஆட்டுகிறது! சனாதனம், சிரிக்கிறது! சங்கராச்சாரிகள் சல்லடம் கட்டுகின்றனர்!

விந்தையல்ல வேதனை, நெஞ்சு வெடிக்கும் காட்சி—இது. சனாதனமும் வைதிகமும், சாதாரண மக்களை மட்டுமின்றி ஆட்சியையே எப்படி ஆட்டிவைக்க முடியும் என்பதற்கான சாட்சி!

*

எந்த விஷயத்தையும் பரிசீலனை செய்யக் கூடாது; கண் முன்னால் காணும் அனுபவத்தைக்கொண்டு பகுத்தறிவை உபயோகித்தே எந்த விஷயத்திலும் ஒரு முடிவுக்கு வரவேண்டும்—இதுதான் பகுத்தறிவாளர்களின் கொள்கை. இந்தக் கொள்கையை அனுஷ்டிக்கும் பட்சத்தில் ஜாதி சமய வேற்றுமைகள் தானாகவே ஒழிந்துவிடவேண்டும் என்பது நிச்சயம். மூட நம்பிக்கையாகிற இருளில் சூழப்பட்டுக் கிடக்கும் விஷயத்தைப் பகுத்தறிவாகிற தீபத்தைக் கொண்டு கண்டு கொள்ள முடியும் அல்லவா?''

திக்கெட்டும் சென்று தினசரி முழக்கமிடுகிறார்களே நமது கழகத் தோழர்கள், அவர்கள் சொற்பொழிவிலே சிந்திய முத்து அல்ல, இது!

கண்ணன் காட்டும் வழியைக் கடைப்பிடிப்பவர், குடந்தை மகா மகத்துக்குக் கூடிய கூட்டத்தைக் காட்டி சுயமரியாதைக்காரர்களுக்குப் புத்தி கூறியவர், உங்கள் பணியின் பலனைப்பாரீர் என்று கிண்டல் செய்தவர், மேற்பாக்கம் 'சஞ்சிகை'யார், "கல்கி" எழுதியிருக்கிறார். அவரா? என்று ஆச்சரியமும் ஐயமும் ஏற்படலாம்! ஆமாம், சாட்சாத் அவரேதான் தமது டிசம்பர் 11-ந் தேதிய இதழில் 'என்ன சேதி?'யின் கீழ் எழுதியிருக்கிறார்.

மூடநம்பிக்கையும், மதப் பற்றுதலும் ஒழியவேண்டும் பகுத்தறிவுக் கண்கொண்டு எதையும் பார்க்க வேண்டும்—இதைக் கடைப்பிடித்தால் சாதிச் சச்சரவு ஒழிந்து சமரசம் ஏற்படும் என்று தெளிவாக எழுதியுள்ளார்—மதபக்தியை "வெறி" என்று குறிப்பிட்டு விளக்கியுள்ளார்!!

மகிழ்ச்சி நமக்கு! மாபாவிகள், நாஸ்திகர்கள், நல்லது நினையாதவர்கள், நடக்கமுடியாததை நடத்த விரும்புபவர்கள், எட்டாப்பழத்துக்கு கொட்டாவி விடுகிறவர்கள் என்று ஏச்சும் பேச்சும் எழும்பிய இடத்திலிருந்து இந்த 'எழுத்துக்கள்' பிறந்துள்ளன என்பதால்!

பகுத்தறிவாளர்களின் பாதையை பாம்புக்குழி என்றும், பார்க்கவும் கூசும் பாதகர் கூட்டம் என்றும், எண்ணி இறுமாந்து கேலியும் கிண்டலும் கிளம்பிய இடத்திலிருந்து இன்று இந்த எண்ணம் பிறப்பட்டிருக்கிறது — அதுவும் அழுத்தந் திருத்தமாக, அடியோடு துரத்தப் பட வேண்டும் என்பதாக!

இரட்டை மகிழ்ச்சி, நமக்கு, இப்போது பகுத்தறிவுப் பணியின் பண்பு அறிந்து, நற்பாதையெனப் பட்டதும், சூழ்நிலை பற்றிச் சிந்திக்காது சொல்ல முன்வந்தது பற்றி!

மூடநம்பிக்கையையும் மதவெறியும் ஒழிக்கப்பட வேண்டும்—அடியோடு" அழிக்கப்படவேண்டும், அப்போதுதான் சாதிபேதமற்ற சமுதாயம் ஏற்படமுடியும், என்று கல்கியார் கூறுகிறார்! பகுத்தறிவுப் பணியின் சிறப்பை — அலங்காரமாக—ஒப்பிக் கூறுகிறார்!!

நாம் இதுவரை எதைச் சொல்லி வந்தோமோ, நாட்டுக்கு நன்மை பயக்கும் வழிகள் என்று இன்றும் கூறிவருகிறோமோ அதை இன்று 'கல்கி'யார் கூறுகிறார் — அவ்வழிதான் நல்லது பயக்கும் நாட்டுக்கு என்கிறார் பகுத்தறிவை, மூடநம்பிக்கை இருளைப் போக்கும் தீபம் என்று குறிப்பிடுகிறார்! அவரது பார்வையைச் சிறிது டெல்லிக்குத் திருப்பிவிட விரும்புகிறோம்—மக்களின் நன்மை நாடும் மசோதா வென்று கூறப்பட்டு கொண்டு வரப்பட்டிருக்கிற ஒரு மசோதாவுக்கு சனாதனமும் வைதிகமும் எவ்வளவு ஆர்ப்பரிக்கிறது! குருட்டு நம்பிக்கையும் பழமைப் பக்தியும் எவ்வளவு கூத்தாடுகிறது! மதவெறி எந்த அளவுக்கு மார்தட்டுகிறது, என்பதைக் காணுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

என்னநடக்கிறது அங்கு! புதுமைக்கு பழைமை சவால் விடுகிறது,—மதத்தின் பக்கம் 'இவர்கள்' நெருங்குவதா, என்று வெறியாட்டம் நடத்துகிறது.

உலகம் முன்னேற, வாழ்வு வளமாக, ஏழையும் மோழையும் இன்பம்பெற வழியமைக்காது மூடப்பட்டிருக்கும் கதவுகள்தான்—மூடநம்பிக்கையும் மதவெறியும்!

மதவெறி—பாவிதான் எல்லை

(அடுத்த பக்கத்தில்)

# சுய-ராஜ்யம்!

கல்விக்கெனச் செலவழிக்கும் பணத்தைச் சர்க்கார் குறைத்திருக்கிறது என்று மத்திய சர்க்கார் கல்வி மந்திரி அபுல்கலாம்ஆசாத் அறிவித்துள்ளார். முன்பு,'ஆறுகோடி-ரூபாய் செலவழிக்கப்பட்டதென்றும் இனிமேற்பட நாலரைக்கோடி தான், செலவழிக்கப்படுமென்றும், அவர் அறிவித்திருக்கிறார்.'

கல்வி — மக்களின் கருந்தனமாகும். ஆனால், இந்தியாவிலோ நூற்றுக்குப் பத்துப்பேர் கூட கல்விகற்க முடியவில்லை—கல்லாமை இந்த நீடிக்கிறது வளர்ந்துகொண்டு வருகிறது. பிற்போக்கும, பேதமையும், அறியாமையும் — கல்லாமை பெற்றெடுக்கும் குழந்தைகள். ஒரு நாட்டின் மதிப்பும், கௌரவமும் அங்கு வாழும் மக்களுடைய கல்வி நிலை வாழ்க்கைத்தரம் ஆகியவைகளை வைத்துத்தான் மதிக்கப்பெறும். இந்த இருதுறைகளிலும்—எண்ணவும் முடியாத இருட்டில், இந்தியா நிற்கிறது.

சுயராஜ்யம் வந்து, இப்போது இந்தியா குடியரசுஎனப் பிரகடனப்படுத்தப்படும் வேளை நெருங்கிக்கொண்டிருக்கிறதேயொழிய, முன்பு நிலவிய வேதனை நிலையில் ஒரு சிறு மாற்றம்கூட ஏற்படவில்லை. இந்த நிலையில் இந்திய சர்க்கார் கல்விக்கெனச் செலவழிக்கப்படும் தொகையைக் குறைக்க முடிவுசெய்திருக்கிறார்கள். இந்த முடிவுக்குச் சர்க்காருக்கேற்பட்டிருக்கும்பணமில்லாக் குறைதான் காரணமாகக் காட்டப்பட்டிருக்கிறது. இக்கட்டான நிலையில் இந்தியசர்க்கார் இருக்கிறது, பண நெருக்கடி பல வழிகளிலும் அதை நெரிக்கிறது, தொல்லை — சுழற்காற்று ஆகியவைகளில் சிக்கியபடகுபோல் தவிக்கிறது என்று கூறப்படுகிறது. உண்மையுங்கூட, இந்திய சர்க்கார் இன்று கேடுபாடான நிலையில்தான் இருக்கிறார்கள்.

இந்தப் பண நெருக்கடியிலிருந்து மீள, சிலவகைகளில் செலவாகும் பணம் மீட்கப்படத்தான் வேண்டும்-பிடித்தம் செய்யாவிட்டால், பணம் மிஞ்சவோ, பட்ஜட்டைச் சரிகட்டவோ இயலாது தான் போய் விடும்.

உறுப்பினர் ஒருவர் கேட்கிறார், ஒரு கேள்வி. நாட்டின் நிலை, இப்படியிருக்கிறதே, நல்லது செய்வதற்குப் பணமில்லையென்று தவிக்கிறார்களே, அதே நேரத்தில் அனாவசியமாகப் பணம், எங்கோ, எதற்கோ செலவழிகிறதே என்பதை எண்ணி.

கேட்டது கேள்வி, அதற்குக் கிடைத்ததோ பதிலல்ல, பதட்டம்!

அமெரிக்காவில் அரசியல் தூதராகயிருக்கும் விஜயலட்சுமி அம்மையார்—பண்டிதரின் சகோதரி—அங்கு நாடு முழுமையும் சுற்றுப்பயணம் செய்துகொண்டிருக்கிறார்—அமெரிக்காவின் கீழ் பிரதேசங்களில் பவனி வந்துகொண்டிருக்கிறார். ஏன், இப்போது அவர் சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டும், என்பது தான் உறுப்பினர் கேட்ட கேள்வி. உறுப்பினர் மனதில், சுற்றுப் பிரயாணத்துக்காகச்செலவழிவது இந்தியாவின் பணம்தானே, இது ஏன் என்ற

(7-ம் பக்கம் பார்க்க)

(முன் பக்கத் தொடர்ச்சி)

யில், இந்திய எல்லையில் ஆடிய கோர நர்த்தனத்தை 'கல்கி'யார் தனது எழுத்திலே காட்டியுள்ளார்.

மதவெறியால்நடைபெற்றது இது மட்டுமல்ல. ஆண்டாண்டு காலமாக அது பலிகொண்டிருக்கும் பட்டியல்—பயங்கரமானது. நினைக்கவும் மீளாத் துயரைத் தருவது, நெஞ்சு வெடிக்கச் செய்வது!

மக்களை மடமையினின்றும் மீட்பேன், மனித சமுதாயத்தைப் பயம் என்ற சுடுகாட்டிலிருந்து வாழ்வு மாளிகைக்கு அழைப்பேன். மனித உலகே எனது கடவுள், அதற்குச் சேவை செய்வதே என் மதம்—சேவைக்கான தொண்டுகளைக் கண்டு சொல்வதே என் வேதநூல் என்று முழக்கமிட்ட சாக்ரடீசுக்கு—மதவெறி, ஒரு கோப்பை நஞ்சைத் தந்தது பரிசாக!

“இருப்பதும் நாட்டிற்கு இறப்பதும் நாட்டிற்கு!” என்று கர்ஜனை எழுப்பிய மாக்ஸ்வினிக்கு மதவெறி இருட்டறையைப் பரிசாகத் தந்தது—பட்டினிபோட்டுச் சித்திரவதை செய்தது.

மதம் மண்ணாய்ப் போகட்டும்,மக்கள் மடமையினின்றும் நீங்கி நல்வாழ்வு பெறட்டும்என்றுகூறியஜான் ஹஸ் உயிரோடு பொசுக்கப்பட்டதும் — மத வெறியால்தான்! மதவெறியெனும் பலி பீடத்தில், கொடுமை வாளால் சித்திரவதை செய்யப்பட்ட மனித மாணிக்கங்கள் ஏராளம். இத்தாலிய சீர்திருத்த வீரன்ஸ்வோனரோலா, மதத்தை மதியேன், என்மனமே மதம் என்று கூறிய அரிஸ்டாடின், புருனோ, உலக உத்தமர் காந்தியார் ஆகியோரை எல்லாம் தனது கொடுமை ஆட்டத்திற்குஆட்படுத்தியது இந்த மதவெறிதான் — பழமைப் பாசம்தான். மூடநம்பிக்கையும், மதம் பக்தியும் மக்களை மட்டுமல்ல, அறிவுக்கதிர்களை, புதுமைகண்ட வீரர்களை — கலிலீயோக்களை, டார்வின்களை இது வரை படுத்திவந்த பாடு, படுத்திவரும் கொடுமை இவ்வளவு அவ்வளவு என்று சொல்லமுடியாது—மக்கள் வாழ்வில் புதுமை காண முயன்ற சீர்திருத்த வீரர்களின் செங்குருதியெல்லாம் “மதம்” என்ற மேடையில் இதுவரை எவ்வளவோ சிந்தப்பட்டிருக்கிறது! அவ்வளவு தூரம் கொடுமை நர்த்தனமாடியிருக்கிறது! இருந்தும், இன்னும் தனது இரத்த வேட்கை தீராது, மதவெறியும், மூடநம்பிக்கையும் கொண்டாட்டமடிக்கிறது! புதுமை எதையாவது கண்டால் சீறிக்கிளம்பி,சிம்மநாதம்செய்கிறது!

இந்த மதவெறியும், மூடநம்பிக்கையுந்தான், இவைகளை ஒழிக்கப் போராடி, வாழ்வுப்பாதை நாசமானாலும் மக்கள் வாழ்வு மலர்ந்தால் போதும் என்ற இலட்சியத்துடன் 'உயிர் மா அல்ல; சேவை எங்கள் கடமை!' என்று தொண்டாற்றிவரும் நம்மை, நாஸ்திகர், நல்லது எண்ணாதவர்கள், நரகத்துக்குப் போகப் போகிறவர்கள் என்று சபித்தும், மிரட்டியும் வருகிறது!

இவ்வளவு கொடுமையும் ஆவேசமும் நிரம்பிய மதவெறியும், மூடநம்பிக்கையும் ஒழிய வேண்டும் என்று, 'கல்கியார்' கூறுகிறார்—எழுதுகிறார். இப்போதாவது. இந்த உண்மை அவர் உள்ளத்தில் மலர்ந்தமைக்கு மகிழ்கிறோம்—இந்த எண்ணம் நீடிக்கட்டும், என்ற எண்ணத்துடன்!

*



# சமூகமும் சட்டமும்

பராஞ்சிபே

சமூகப் பழக்க வழக்கங்களைக் குறித்து ஆராயும் பொழுது, இரு கொள்கைகளை நாம் மனத்தில் இருத்திக் கொள்ளுதல் அவசியம். இவை தனிச் சுதந்திரமும், பொது நன்மையுமாகும். நமது அபிப்பிராயமும் செயல் முறையும் இந்த இரண்டுக்கும் இயன்ற மட்டில் பொருந்திப் போகவேண்டும். பொது நன்மையென்றுபோலிக்காரணங்களைக்கூறித் தனி மனிதரின் சுதந்திரத்தைப்பறிமுதல் செய்யக் கூடாது. ஒரு குறிப்பிட்ட சட்டமோ, வழக்கமோ அது தனி நபரின் சுயேச்சையைப்பாதித்த போதிலும், அது கட்டாயம் அவசியமே என்று வாதிப்பதாயிருந்தால், அதற்குரிய காரணம் போதியஅளவு தெளிவுபடுத்தப்பட வேண்டும். இவ்விஷயத்தில் ஏற்கெனவே கொண்டுள்ள அபிப்பிராயம் தனிமனிதரின் சுயேச்சைக்குச்சாதகமாகவே இருக்க வேண்டும். பொது நன்மைக்காக இதைக் குறைக்கும் பொழுது இதற்குரிய காரண காரியங்களைருசுப்பிக்க வேண்டியது பொதுநல வாதிகளின் கடமையாகும்.

தனிச் சுயேச்சையைப் பங்கப்படுத்தாமலிருக்க வேண்டுமென வற்புறுத்துவது ஏனெனில், வயது வந்த ஒருவர், அவர் சாதாரண அறிவுடனிருந்தபோதிலும், தனக்கு எது நல்லது என்பதைப் பற்றிப் பிறரைவிடக் கூடுதலாகவே அறிந்திருப்பார்; மேலும் பிறரால் வற்புறுத்தப்பட்டு ஒரு காரியத்தைச் செய்வதைவிட, அவர் தாமாகவே ஒரு காரியத்தைச் செய்து அதனால் தீமை ஏற்படினும் அவர் அதைச் சகித்துக் கொள்ளத் தயாராகவே இருப்பார். தனி நபர்களுக்குச் சுதந்திரமளிக்கப்பட்டிருக்கும் இடங்களிலெல்லாம் சமூகம் அதிதுரிதமாக முன்னேறியிருப்பதைக் காணலாம். சுதந்திரம் தாண்டவமாடுமிடத்தில் தான் புதிய நலன் பயக்கத்தக்க கொள்கைகள் தோன்ற முடியும். அது அனுபவ பூர்வமான உண்மையாகும். சகல அபிப்பிராயங்களும், நடவடிக்கைகளும் பழக்க வழக்கங்களும் எவ்வித மாற்றமுமின்றி ஒரே படியாக இருக்கும் ஒரு நாட்டில் ஜனங்கள் முற்போக்கடையாமல் பிற்போக்குறுவதைச் சரித்திரம் அடிக்கடி நமக்குப் போதிக்கின்றது. இம்முறையில் ஏற்படும் ஸ்தாபனங்கள் சுற்றுச் சார்புகளுக்குத் தகுந்தபடியிருந்தால் சில காலம் சந்தோஷமும் திருப்தியும் ஏற்பட்டிருப்பதாக வெளிப்பார்வைக்குத் தோன்றலாம்; ஆனால் அச்சமூகத்தில் அழிவுநோய் கால்கொண்டு வருகிறது என்பது மட்டும் உண்மை.

இந்தியாவில், இத்தகைய விஷயங்களை, இந்துக்களும், முஸ்லீம்களும் பழைய சாஸ்திர ஆதாரங்களைக் கொண்டு ஒப்பிட்டுப் பார்க்கின்றனர். பழைய சாஸ்திரங்களின் உட்கருத்தென்ன வென்பதைப்பற்றியே பெரும்பாலும் விவாதிக்கப்படுகின்றது. சாஸ்திரங்களிலுள்ள வார்த்தைகள் ஒரு பகுத்தறிவு வாதிக்கு அவ்வளவு முக்கியமாகத் தோன்றாதெனினும், குறிப்பிட்ட ஸ்தாபனம் தோன்றிய காலத்தின் நிலைமையைச் சரிவர உணர அவன் இயன்ற மட்டும் முயற்சிப்பான். உண்மையாக அது நன்மை பயந்ததா என்றும், காலத்தின் மாற்றத்துக்குத் தக்கவாறு, அதிலும் மாற்றம் ஏற்படுத்துவது அவசியமா என்றும் அவன் ஆராய்ச்சி செய்வான். இந்தப் பழைய சாஸ்திரங்களும் ஆதாரங்களும் எக்காலமும் இருந்து வருகின்றன என்பதை ஒப்புக்கொள்ளாத ஒருவர், ஒருகாலத்தில் இவை புதிதாகவே தோன்றின என்பதையும், ஒருவேளை அவை தோன்றிய காலத்தில் அவற்றிற்கு வைதிகர்களின் எதிர்ப்பு ஏற்பட்டிருக்கக் கூடும் என்பதையும் உணர்வார் என்பது நிச்சயம். ஆகவே, அவசியமுள்ள, ஆலோசனையுடன் செய்யப்படும் மாற்றங்களை உண்டுபண்ண ஆட்சேபனை எதுவும் ஏற்படத் தேவையில்லை. இத்திருத்தங்களும் நாளடைவில் பழையனவாகிப் பெருமைபெற்றுவிடுமல்லவா? அன்றியும், பிரமாணங்களாகக் காட்டப்படும் சாஸ்திரங்களும் கூட மிக ஏராளமாக இருப்பதும், அவை ஒன்றுக்கொன்று முரணாக இருப்பதும் கண்கூடு. இதனிமித்தம், எந்தப் புதிய திருத்தத்துக்கும் இவற்றிலிருந்தே தக்க ஆதாரத்தை யாரும் எடுத்துக்காட்ட முடியும். எனினும், பகுத்தறிவு வாதி தனது கோட்பாடுகளுக்கு ஆதாரங்களைத் தேடக் கூடாது. இவற்றை ஒருகால் உதாரணங்களாகக் குறிப்பிடலாம். நமது நாட்டில் அனேகமாக சகல ஸ்தாபனங்களும் மதத்துடன் பிணைக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, சீர்திருத்த வாதியின் வேலை மிகமிகக் கஷ்டமானதாக இருக்கின்றது. எதிர்காலத்தில் இக்கஷ்டம் இன்னும் அதிகரிக்கும் விதத்தில் அவன் எச்செய்கையையும் செய்துவிடக்கூடாது. நமது நாட்டையும்—ஏன் உலகம் முழுவதையும் பொறுத்த தர்க்க சாஸ்திரம், சரித்திரம், அனுபவம் இவற்றின் உதவியையே அவன் ஆதாரமாகக்கொள்ள வேண்டும்.

பொதுஜனஅபிப்பிராயத்தைமாற்றிச் சீர்திருத்தஞ் செய்யவேண்டுமேயல்லாது, சட்டத்தின் மூலம் சீர்திருத்தத்தை வற்புறுத்தக் கூடாதென ஓர் சாரார் கருதுகின்றனர். எது சரியென முடிவு செய்யும் விஷயத்தில் பொதுஜன அபிப்பிராயத்தைத் தாண்டி எந்தச் சட்டமும் வெகு தூரத்தில் செல்லக்கூடாது என்பது உண்மையே. பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள கொள்கைகளுக்குச்சட்டம் பலனற்றதாகப் போய்விடக்கூடும். ஜனங்களிடையே சட்டத்தை மீறும் வழக்கம் இதுகாரணமாகசர்வசாதாரணமாகி விடலாம். அமெரிக்காவில் பூரண மதுவிலக்குச் சட்டத்தையும், இந்தியாவில் சாரதா சட்டத்தையும், இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். ஆனால்பெரும்பாலும் காலபோக்குக்கு மிகவும் பிற்பட்டவைகளாகவே சட்டங்களிருக்கின்றன. இவை சென்றகாலக் கொள்கைகளையே பிரதிபிம்பிக்கின்றன. காலத்திற்கேற்ற மாறுதல் செய்வதற்குஅமைக்கப்பட்டிருக்கும் இயந்திரம் எவ்விடத்தும் பூரண நிலையிலில்லை. இருக்கிற சட்டங்கள், எப்போதும் அவற்றினால் சாதகமடை

யும் ஒரு தனிக் குழுவினரை உண்டு பண்ணுகின்றன: திருத்தஞ் செய்வதை இவர்கள் எதிர்ப்பது இயல்பு. திருத்தஞ் செய்ய ஒழுங்கான ஸ்தாபனம் ஏற்பட்டிருக்கும் இடங்களிலும், நிலைமைகள் மிக மோசமான நிலைமையை அடைந்த பிறகே, இது வேலைசெய்ய ஆரம்பிக்கின்றது. மேலும், ஒரு சர்வாதிகாரியின் இஷ்டப்படி சட்டமியற்றப்படாத ஒரு நாட்டில், இந்தத் திருத்தங்கள் பலனளிக்க நீண்டகாலம் பிடிக்கின்றது. இக்காரணத்தினுலேயே, சட்ட புத்தங்களில் பொதுஜனங்களுக்குப் பன்யபடாத, ஆனல் வக்கீல்களுக்கு மட்டும் உபயோகப்படும் சட்டங்கள் ஏராளமாக இருப்பதைக் காண்கின்றோம்.

ஜனநாயக அல்லது தேசீய ஆட்சி நிலவும் தேசங்களைவிடச் சமூகஸ்தாபனங்கள், பழக்க வழக்கங்கள் சம்பந்தமான சட்டங்கள் விஷயத்தில் இந்தியா மிகவும் பழைமை விரும்பியாகவே இருந்து வருகின்றது. நமது நாடு, சுமார் இருநூறு ஆண்டுகளாக அயல்நாட்டாரால் ஆளப்பட்டு வந்தது. தமது நிலைமையைப் பலப்படுத்தும் நோக்குடன் பிரிட்டிஷ் அரசாங்கம் மத விஷயத்தில் கண்டிப்பான நடு நிலைமை வகித்து வந்தது.

இங்கு எவ் விஷயமும் சிறிதளவேனும் மத வாசனை பெற்றிருப்பதால், எந்தச் சீர்திருத்தத்தையும் செய்ய முயலும்பொழுது, மதத்தில் தலையிடுவதாக ஒரு சாரார் ஆட்சேபிக்கமுடியும்.

எனவே, சர்க்கார் இவ் விஷயத்தில் கோழையாக இருப்பதில் ஆச்சரியமில்லை. பிரிட்டிஷ அரசாட்சியின் ஆரம்ப கரலத்தில் பழைய ஸ்மிருதிகள் போன்ற சாஸ்திரங்களின் தத்துவார்த்தங்களை யெடுத்துச் சோல்ல, ஜட்ஜுகள் தங்களுடன் பண்டைக்காலப் பண்டிதர்களை வைத்திருந்தனர். இப் பண்டிதர்கள் பிரதி பலன் பெற்று ஒரு சார்பாக அபிப்பிராயங் கூறத் தயங்கினுர்களில்லை யென்றுஞ் சொல்லப்படுகிறது. இந்த ஸ்மிருதிகளும் சாஸ்திரங்களும் அக்கால நிலைமைக்குக் கூடப் பொருத்தமுடையனவாக இருக்கவில்லை. எனவே, காலத்திற்கு முரணுன பல சட்டங்களுடன் இந்தியா பிணைக்கப்பட நேர்ந்தது. அந்நிய ஆட்சியின் அவசியத்தையெடுத்துக்காட்ட அரசாங்கத்தார் இத்தகைய தீமைகளை ஓரளவு பாதுகாத்து வந்ததாகவும் சர்க்காரைக் கண்டித்தோர் குறை கூறினர். எவ்வாருயினும், சட்டத்தின் மூலம் ஏற்படுத்தக்கூடிய முன்னேற்றத்திற்குக்கூட சர்க்கார் சாதகமளிக்கவில்லையென்று சொல்லலாம்.

உடன் கட்டையேறும் வழக்கத்தைத் தடுத்து, சம்மதவயது மசோதாவை நிறைவேற்றியது ஆகியவிஷயங்களில் மதக்கொள்கைகளையெதிர்த்து அவர்கள் சட்டமியற்றியுள்ளார்கள் என்பதை ஒப்புக்கொள்கின்றேன். ஆனல் இம்மாதிரி விஷயங்கள் மிகமிகச் சில தான். சில காலமாகத்தான் — சட்டசபைகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் பெரும்பாலான இடம் பெற்றபிறகே, சமுக சீர்திருத்தத் துறையில் சிறிது முயற்சியெடுக்கப் படுவதைக் காண்கிறோம். எனினும், அதிகாரிகள் படிப்படியான அபிவிருத்திக்குச் சாதகமாக இருப்பதை விட்டு, எதிர்பார்ப்பதற்கு விரோதமாகப்பழையஎச்சரிக்கையான முறையையே கைக்கொள்கிருர்கள்.

சட்டம் எப்பொழுதும் பழைமை விரும்பியாகவேயிருக்கின்றது என்பதாக முன்னர் சொன்னேம். ஆனல் கல்வி வாசனையில்லாத, பாமர மக்களது பொது அபிப்பிராயத்தைவிடச் சிறிது முற்போக்கானதாகவே சட்டம் இருக்க வேண்டும். சர்க்கார் உண்மையாகவே தைரியமுடையதாயிருந்தால் சமுகச் சீர்திருத்தத்துக்கு அதிகஉதவி செய்யலாம். சில விஷயங்களைச் செய்யும்படி, அல்லது செய்யக்கூடாதென வரையறுக்கும் சட்டங்களையும், இஷ்டப்படி நடந்து கொள்ள உரிமையளிக்கும் சட்டங்களையும், இங்கு வேறு பிரித்துக்கூற வேண்டும். முதல்வகைக்கு உதாரணமாகச் சாரதா சட்டத்தைக்கூறலாம். இரண்டாவது பிரிவுக்கு உதாரணமாக விதவைகள் மணச்சட்டத்தைக் குறிப்பிடலாம்; முன்னேற்றத்திற்கான, சுதந்திரமளிக்கும் சகல சட்டங்களையும் பிரச்சாரம்செய்யவேண்டியது ஒரு பகுத்தறிவுவாதியின் கடமையாகும். மற்றச் சட்டங்களைப் பற்றி ஆராயும் பொழுது அவன் சகல சந்தர்ப்பங்களையும் கவனித்துக் கொள்ள வேண்டும். தனது சொந்த அபிப்பிராயம் முன்னேற்றத்துக்குச் சாதகமாகவேயிருக்கின்றது என்பதை அவன் எப்பொழுதும் தெளிவு படுத்தவேண்டும். திடீரெனச் சட்டமியற்றுவதை ஆமோதிக்க அவன் தயங்கிய போதிலும், அவனது நடவடிக்கைகள் சட்டத்திற்குப்பொருத்தமுடையனவாகவே இருக்க வேண்டும். எதிர் காலத்தில் சமூக விஷயங்களில் சட்டஞ் செய்ய உத்தேசித்தால் அவை முதலில் அவரவர் இஷ்டப்படிநடக்க உரிமை அளிப்பனவாக இருக்க வேண்டும். இதுவே நலமென எனக்குத் தோன்றுகிறது. திடீரெனச் சட்டமியற்றுவதை ஆமோதிக்கத் தயங்கும் மனப்பான்மையை மன்னிப்பதெல்லாம், மத சம்பந்தமான விஷயங்கள் என்ற காரணத்தால் சீர்திருத்தத்தைச் செயலில் காட்டுவதில் ஏற்படும் கஷ்டங்களை உத்தேசித்தேயாகும். ஆனல் ஒழுக்கத்தையோ, அல்லது பொதுஜன நன்மையையோ பொறுத்த விஷயங்களில் மிகத் தைரியமான போக்கையே கைக்கொள்ள வேண்டும். மதத்தில் அளவு மீறிய பற்றுள்ளவர்களை எக்காலத்தும் சிறிதளவு விட்டுக்கொடுத்து சமாதானப்படுத்துவது என்பது முடியாத காரியம். ஆனல், லௌகீக விஷயங்களின் போலித்தனமான மத ஆட்சேபணைகளை ஏன் பொருட்படுத்த வேண்டுமென்று விளங்கவில்லை. உதாரணமாக திருமணம், ஆகியவற்றைக்கட்டாயமாகப் பதிவு செய்யும்படி வற்புறுத்த வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிடலாம். இவை ஒருசமுகச் சீர்திருத்த விஷயமட்டுமின்றி முன்னேற்றம் காட்டும் விஷயமுமாகும்.

*

## சந்தாதார்களுக்கு!

பன்முறை தெரிவித்தும், பலர் இன்னும், முகவரி மாற்றம் குறித்தோ, பத்திரிகை வராமை பற்றியோ, கடிதம் எழுதும்போது சந்தாஎண் குறிப்பிடாமலே, கடிதம் எழுதுகிருர்கள். இதனுல் எல்லா வகைகளிலும் சங்கடம் ஏற்படுகிறது. எனவே, இனி, சந்தாஎண் குறிப்பிடப்படாத கடிதங்கள் கவனத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட மாட்டா என்பதை அறிவித்துக் கொள்கிறோம்.

நிர்வாகி.



# கண்ணீரால் தீராது, கவலே!

ஊரேங்கும் சுற்றி வருகிறோம், ஓரிடத்திலாவது நன்றியில்லை!

வரவேற்புத் தருகிருர்கள்; அது வாழ்த்தாக இல்லை! வருத்த மூட்டையாக இருக்கிறது!!

பஞ்சம், பராமரிப்பீர் என்று எங்கும் கோரிக்கைகள்தான், கூக்குரல்கள் தான்!

எங்கள் துரதிர்ஷ்டம்; எங்கு போனுலும் இப்படித்தானு!

மக்களின் கோரிக்கைகள், துயரக் கதைகள் காதைத் துளைக்கின்றன!

பிச்சைக் கேட்கிறோம் என்று பேசுகிருர்கள், மக்களெல்லாம் ஏசுகிருர்கள்!

நகரம், கிராமம், எங்கு சென்றுலும் மக்களிடம் இதே பேச்சா?

என் செய்வோம் நாங்கள், எங்களையா இப்படித் தூற்றுவது?

எவ்வளவு செய்தோம்; இதற்கு இதுதானு கிடைக்கும் பரிசு!

* * *

துயரமும், துக்கமும் எதிரொலிக்கும் வேதனைக் கீதம்—அல்ல, அல்ல ஒப்பாரி—இது. உள்ளத்தை நெகிழ வைக்கும் உருக்கமான சொற்கள், கல் நெஞ்சையும் கரைய வைக்கும் 'காட்ட மாட்டீரா, கருணை' என்ற ஓலம்!

சோகத்துடன் பேசியிருக்கிருர், இதுபோல. சொல்ல முடியாத வேதனையும், வீழ்ச்சி நினைவும் அவரது வார்த்தைகளில் விளையாடியிருக்கிறது!

தொண்டையைத் துயரம் அடைக்க, வார்த்தைகள் வாயிலிருந்து கிளம்ப வம்பு செய்ய, சொற்பொழிவாற்றியிருக்கிருர்!

கண்ணீர் — சிதறவில்லை, ஒருவேளை பெண்மணிகள் முன்னிலையில் நாம் பேசுகிறோம் என்ற எண்ணத்தாலோ, என்னவோ — கண்களில் நீர் ததும்பி நிற்கக் கதறியிருக்கிருர்!

கல்மனம் படைத்த காட்டுராஜா ஒருவன், கண்டபடி மனம்போன போக்கில் மக்களை மறந்து, மமதை கொண்டு திரிந்துவிட்டு; 'ஊர் முழுதும் சாடுகிறது, ஒன்றுக்கும் உதவாதவன் என்று தூற்றுகிறது' என்று அறிந்ததும், 'கல்லையும் முள்ளையும் களைந்தேனே! அங்கு கன்னலும் செந்நெலும் விளையவில்லையென்றால் அது என் குற்றமா! ஏனிப்படிப் பாய்கின்றீர், என்ன செய்துவிட்டேன்! காட்டெருக்கு வளர்ந்தால் என்ன என்றுதானே விட்டேன்! முன்னொரு நாள் தெருவோரத்தில் செத்துக்கிடந்த தேளைக் கண்டுபிடித்துச் சொன்னேனே, அதைக்கூடவா மறந்துவிட்டீர்கள்! காளி கோயிலில் —அன்றொரு நாள், நீர் கண்மூடி நின்றபோது, காணடா காளியை என்று காட்டினேனே — எங்கே காளியின் கருணை உனக்குக் கிட்டாமல் போய்விடுகிறதோ என்ற துயரத்தால்! கற்பூரம் வாங்கிவாடா, அதுவே உனக்குப் புண்யம் என்று கூறி, போகும் ஜென்மமாவது புனிதமாக உதவினேனே! இவ்வளவு உதவிய என்னையா குறை கூறுகிறீர்! ஏனோ, இது? அடுக்குமா, நான் அயலானு! அறுவடையைஅப்படியே கொடுங்கள் என்று கூறியதற்கா, எனக்கு கொடுங்கோலன் பட்டம்! குடிகேடன், நாசகாலி, நாடறியாதவன், நல்லது செய்யாதவன் என்ற வசைமொழி! கோபச் சொற்கள்!!"

என்று சிம்மாதனம் விட்டிறங்கி, சிம்ம நடை மறந்து, அன்ன நடைபோட்டு, நேற்று அதட்டி மிரட்டிய வாயால், 'குடிசைபுரிக் கோமான்'களிடம் சென்று, குய்யோமுறையோ என முறையிட்டால், அங்குவாழும் உழைப்பின் உருவங்களுக்கு உள்ளம் உருகுமல்லவா! "இப்படி வந்து கதறுகிருனே, ஐயோ பாவம்!" என்ற எண்ணத்தால்! ஏழை இதயங்களின் இயற்கையே அது தானே, அந்தஇரக்கநிலை,இப்போது, பெண்கள் முன்னிலையில் சென்று கண்ணீரைப் பேச்சாகச் சிந்தியிருக்கும் கனவான், சீறிடும் சீமான், சிம்ம நடைபோடும் கோமான், நிதி மந்திரி கோபாலரை நினைக்கும் போது, நமக்கு ஏற்படுகிறது!

மலத்தில் கை வைத்துவிட்டு, 'அம்மா இங்கே வாரும், அழகான மணம் இதைப் பாரும்' என்று வயது வந்தும்—வக்கிரபுத்தி காரணமாக—வறண்ட மூளையுடைய ஒரு பையன் கூறினல் ஐயோ, அது என்ன செய்யும், அறியாத சிறுசு நம்ம காலக் கோளாறு என்று வேதனைப்படுவாளல்லவா, குழந்தையைப் பெற்ற தாயார்! அந்தக் கஷ்ட நிலை நமக்கு ஏற்பட்டிருக்கிறது. ம்திமந்திரி யெனத் தோள் தட்டி நடந்த நிதி மந்திரியார் கலக்கப்பட்டு கண்ணீர் வடிப்பதைக் காணும் பொழுது!

* * *

ஆந்திராவிலே ராஜமகேந்திரபுரத்துக்கு அருகிலுள்ள கதியம் என்ற இடத்திலே தான் கண்ணீர் கலந்த பேச்சுக்களைக் கொட்டியிருக்கிருர்! அவ்வூர் மாதர் நலவுரிமை இலாகாவின் சார்பில் அங்கு சென்ற—இல்லை! விஜயம் செய்த—கனம் மந்திரியாருக்கு ஒரு வரவேற்பு வழங்கப்பட்டதாம். அதற்குப் பதிலளிக்கையில் தான், பெண்மணிகள் அடங்கிய அந்தக் கூட்டத்தில் கோபாலர் 'கோ'வெனக் கதறியிருக்கிருர் — சோகமும், துக்கமும் கலந்த வார்த்தைகள் மூலம்!

ஆந்திரா—தாய் மொழி பேசப்படும் இடம்—எனவே ஆங்கிலம் மறந்து, அழகு தெலுங்கிலேதான் பேசினராம்! தாய்மொழியில் அவர் வைத்த 'ஒப்பாரி', நம் காதில்பட வாய்ப்பு இல்லையென்றுலும், அதை அப்படியே ஆங்கிலத்தில் தந்திருக்கிறது 'மெயில்' பத்திரிகை, "மந்திரியின் ஒப்பாரி" என்று கொட்டை எழுத்துக்களில் மகுடமிட்டு! அந்த ஒப்பாரியிலிருந்து, எடுக்கப்பட்ட கண்ணீர்த் துளிகளில் சிலதான், நாம் ஆரம்பத்தில் தந்திருக்கிறோமே, அவை. அதைப் படிக்கும்போது

கோபாலரின் மீது அனுதாபம் பிறக்கிறது — மனித உணர்ச்சி காரணமாக; பாவம், நல்ல பிள்ளை காலக் கோளாருல் கைதவறி வைத்துவிட்டு கஷ்டப்படுகிறது என்று கூறுவாளே அம்மா அதைப்போல!

கதியத்திலே கனம் மந்திரியார் கண்கலங்கி யிருக்கிருர், வேதனைப் பட்டிருக்கிருர், விம்மியிருக்கிருர், எங்கு போனுலும் 'இது வேண்டும் அதைச் செய்து கொடு' என்றே மக்கள் கேட்கிருர்கள்! மந்திரிகள் என்ருலே, மக்கள் கோரிக்கைகளையும் குறைபாடுகளையுமே கொண்டு வந்து குவிக்கிருர்கள்.

பிச்சை எடுக்கும் பெம்மான்களா, அல்லது ஆளவந்த மேதைகளா என்று பத்திரிகைக் காரர்களும், மக்களும் கண்டனம் செய்கிருர்கள்.

இதற்குத் தானு மந்திரி பதவி பெற்ருேம், ஒரு நல்வார்த்தை கூட எங்களுக்கு, எல்லாவிடத்திலும் இல்லாவிட்டாலும் எங்கேயாவது ஓரிடத்தில் கிடைக்கக்கூடாதா, எங்கு போனுலும் ஒரே கண்டனமும், கோரிக்கைகளுக்குமாகத்தானு இருக்கவேண்டும், என நிதிமந்திரியார்,— அண்மையில் — அழுதிருக்கிருர்! ஆட்சிப்பீடம் ஏறிய முதல் ஒரு அன்புச் சொல்கூடக் கிடைக்கவில்லையாம்!!

வரவேற்பு அளிக்கிருர்கள், அவைகளில் ஒரு வார்த்தைகூட எங்களைப் பாராட்டியிருப்பதில்லை. அது பெரிய "லிஸ்டு" போல இருக்கிறது — மக்களுடைய குறைகளும் கோரிக்கைகளும் அடங்கிய பட்டியலாக இருக்கிறது, என்று பரிதாபமாகக் கூறுகிருர்.

அண்மையில், சில தினங்களுக்கு முன் தனது மந்திரிபதவி காலம் ஐந்து ஆண்டுகள் நீடித்தமைக்காக விழா கொண்டாடியவர்—நிதிமந்திரி. அவர், தான், கதியத்திலே கலங்கியிருக்கிருர்.

* * *

நிதிமந்திரியாரின் நிலை உண்மையில் வருத்தப்படி வேண்டியதுதான் —அவரது சகாக்களுக்கும், அவருக்கும் எங்குசென்ருலும், இன்று பொதுமக்களிடையில் உற்சாகமோ, உணர்ச்சி வேகமோ, எழும்பவில்லை யென்பது உண்மை. "காந்தி" யின் பெயர் சொல்லிக்கொண்டு கிராமங்களிலும் சுயராஜ்யம் என்று கூறிக்கொண்டு நகரங்களிலும், தொண்டர்களாய்ச் சுற்றிவந்த போது, கிடைத்த மாலை மரியாதை 'வாழ்க' என்ற முழக்கம், ஏராளமான கூட்டம் இப்போது இருப்பதில்லைதான். மந்திரி வருகிருராம் என்று யாரிடமாவது சொன்னுல் 'அவர்களுக்கென்னவேலே! ஊர் சுற்றவேண்டியதுதானே! ஓய்யாரமாகச் சம்பளம்வாங்கி உல்லாசமாகப் பொழுது போக்குகிருர்கள். நம்மைச் சொல்லு, நாய்போல் உழைத்தாலும் நாளைக்கு இருவேளை பட்டினி' என்றுதான் பதில்கிடைக்கிறதேயொழிய, முன்பு காட்டப்பட்ட உற்சாகம் இல்லை—இப்போது அந்த அளவுக்கு மக்கள் மன்றத்திலே ஆளவந்தார்மீதும், காங்கிரஸ் மீதும் இன்று அதிருப்தியும் ஆத்திரமும் நிறைந்து இருக்கிறது.

"சுயராஜ்யம் கொண்டுவரவில்லையா?"

"மதுவிலக்கை அமுல்நடத்தவில்லையா?",

"இதெல்லாம் மக்களுக்காக நாங்கள் சாதித்தது தானே"

இருந்தும், இவைகளையெல்லாம் மறந்து, எங்களைத் தூற்றுகிறீர்களே, துவேஷிக்கிறீர்களே என்று துயரகீதம் பாடியிருக்கிருர், அவர். அவர் சொல்லும் இத்தகவலை யாரும் மறுப்பதற்கில்லை, சுயராஜ்யம் கொண்டு வந்தது, மதுவிலக்கு அமுலுக்கு கொண்டுவந்தது ஆகிய செயல்கள் காங்கிரஸ்காரர்கள் இந்நாட்டுக்குச் செய்த சேவைதான். யாரும் மறுக்க மாட்டார்கள், ஆனுல் விஷயம் இத்துடன் நின்றுவிடாதே, வந்தது சுயராஜ்யம், பின்னர்? என்று, ஒருகேள்வியும் எழும்பத்தானே செய்யும், அக்கேள்விக்குச் சரியான பதில் கிடைக்கவில்லையென்ருல், எதிர் பார்த்து ஏமாந்தவர்களான மக்கள், ஆத்திரம் கரைபுரளாமல் போகுமா!

"இந்தியாவைப் போல உலகிலேயே எந்த நாட்டிலும் இவ்வளவு அதிகமான வரிகள் கிடையாது"

சென்ற சிலதினங்களுக்குமுன் காசியிலே, முழக்கமிட்ட, இந்தியாவின் துணைப்பிரதமர், இரும்பு மனிதர் சர்தார் பட்டேல், இதுபோலக் கூறியுள்ளார். உண்மையில் இதுபோல, இன்று மக்கள் அரசாங்கத்துக்கு வரி செலுத்துகிருர்கள், வாடுகிருர்கள். அதிகமாக வரிசெலுத்திய அவர்கள் அரசாங்கத்திடமிருந்து, அதுவும் சுயராஜ்யமல்லவா என்று எண்ணிக்கொண்டு, அதிக நன்மைகளை எதிர்பார்க்கிருர்கள், அவைகளைச் செய்யவோ வக்கில்லை, வழியில்லை வரிபோதவில்லையென்று பதில் கிடைத்தால்?

(5-ம் பக்கம் பார்க்க)

4-ம் பக்கத் தொடர்ச்சி

ஸ்பில்ஸ்பரி ஊருக்கு உழைத்த உத்தமர். சிக்கலைத் தீர்த்த சிங்கம் விஞ்ஞானக் கண்ணுல், வேண்டிய அளவு சாதிக்கலாம் என்பதை உணர்த்தியவர்.

விஞ்ஞானநூல் ஒரு கையிலும் விஞயகர் ஸ்தோத்திரம் இன்னெரு கையிலும் வைத்துக்கொண்டு, வீணுகப்பொழுதைப் போக்கித் திரிகின்ருர்களே இங்குள்ளபலர், வேதமோதியாகவும் விஞ்ஞானியாகவும் ஏககாலத்தில் விளங்கவேண்டும், என்ற எண்ணத்துடன் வேடதாரிகளாய்! இதுபோலல்லாது, சமுதாயத்துக்கு நாசம் விளைவிக்கும் ஒருநாசச் செயலை அழிப்பதற்காகத் தனது நல்லறிவைப்பயன் படுத்திஞர் — வாழ்வில் வளமில்லையென்ருலும்தன் ஆசையில் பலன் கண்டார் —வெற்றி பெற்ருர், மக்கள் மனதில் நிறைந்தார்!

●

## பிறப்பு

15—11—49 செவ்வாயன்று நடிப்புப்புலவர் கே. ஆர். இராமசாமி அவர்களின் துணைவியார் தோழியர் கல்யாணிக்கு கோவையில் ஆண் குழந்தை பிறந்தது என்றும் தாயும் சேயும் நலம் என்றும் அறிய மகிழ்கிறேம்.

Edited Printed & Published by C. N. Annadurai M. A. at "Dravidanadu" Press, 95, Tirukkachinambi Street, Kancheepuram,

